ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



ஸ்ரீ ஸூக்திமாலா — மலர் 27

திருமங்கையாழ்வார் அருளிய

# திருவெழுகூற்றிருக்கை

[ பெரியவாச்சான்பிள்ளை அருளிய
இரு வ்யாக்யானங்கள், விவரணத்துடன் ]



பதிப்பாசிரியர்:—

ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
அட்வகேட்,
3. புத்தூர் அக்ரஹாரம். திருச்சி-17.

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

## திருமங்கையாழ்வார் திருநக்ஷத்ர தனியன்

வ்ருஸ்சிகே க்ருத்திகா ஜாதம் சதுஷ்கவி ஶிக2ாமணிம் ।
ஷட்ப்ரப3ந்த4க்ருதம் ஶார்ங்க3 மூர்த்திம் கலிஹமாஶ்ரயே ॥

[கார்த்திகையில் கார்த்திகை நன்னாளில் அவதரித்தவரும், நாலு கவிப்பெருமாளும், ஆறு பிரப3ந்த4ங்களை அருளியவரும், ஶார்ங்க3மென்னும் வில்லின் அம்ஶமுமான கலிகன்றியை ஆஶ்ரயிக்கிறேன்.]

★

## திருமங்கையாழ்வார் நித்ய தனியன்

கலயாமி கலித்4வம்ஸம் கவிம் லோக தி3வாகரம் ।
யஸ்ய கோ3பி4: ப்ரகாஶாபி4: ஆவித்3யம் நிஹதம் தம: ॥

[தமது விளங்காநிற்கும் வாக்குகளாகிற கிரணங்களால் அஞ்ஞானவிருளை அழிப்பவராய், (அதனாலேயே) உலகுக்கோர் ஸூர்யனாயிருப்பவரான கலிகன்றியென்னும் திருமங்கையாழ்வாரை தியானிக்கிறேன்.]

★

## திருமங்கையாழ்வார் வாழித்திருநாமம்

கலந்ததிருக் கார்த்திகையில் கார்த்திகை வந்தோன் வாழியே
காசினியி லொண் குறையலூர்க் காவலோன் வாழியே
நலந்திக ழாயிரத்தெண்பத்து நாலுரைத்தான் வாழியே
நாலைந்து மாறைந்தும் நமக்குரைத்தான் வாழியே
இலங்கெழு கூற்றிருக்கை யிரு மட லீந்தான் வாழியே
இம்மூன்றிற் பாட்டிரு நூற்றிருபத்தே ழிசைத்தான் வாழியே
வலந்திகழுங் குமுதவல்லி மணவாளன் வாழியே
வாட்கலியன் பரகாலன் மங்கையர்கோன் வாழியே.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## திருவெழுகூற்றிருக்கை வ்யாக்4யானங்கள்

## முன்னுரை

[ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், 'ஸுதர்ஶனம்' ஆசிரியர், 3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.]

நாலு வேத3ங்களை நாலு தி3வ்யப்ரப3ந்த4ங்களாக அருளிச்செய்து "வேதம் தமிழ் செய்த மாறன்" என்னும் பெரும் புகழைப் பெற்றவர் நம்மாழ்வார். அந்த நாலு வேத3ங்களுக்கு ஆறு அங்க3ங்கள் அமைந்ததுபோலே, இந்த நாலு வேத3ங்களுக்கும் ஆறு அங்க3ங்களாக அமைந்தவை 'ஆறங்கங்கூற அவதரித்த'வரான திருமங்கையாழ்வாரின் ஆறு பிரப3ந்த4ங்கள். "பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறியதிருமடல், பெரியதிருமடல், திருநெடுந்தாண்டகம்" என்னும் அடைவிலே அவதரித்த அவ்வாறு பிரப3ந்த4ங்களிலே மூன்றாவது ப்ரப3ந்த4மாகும் இத்திருவெழுகூற்றிருக்கை. வேத3ங்களைத் தெளிவுபடுத்தும் வேதா3ங்க3ங்களைப்போலே—நம்மாழ்வார் தமது பிரப3ந்த4ங்களில் சொன்ன அர்த்த2ங்களையே திருமங்கையாழ்வார் தமது ப்ரப3ந்த4ங்களில் தெளிவுபடுத்துகிறார் என்னும் காரணத்தாலேயே இவருடைய ப்ரப3ந்த4ங்கள் அவருடைய ப்ரப3ந்த4ங்களுக்கு அங்க3ங்களாகக் கீர்த்திக்கப்படுகின்றன. அவற்றில், நம்மாழ்வார் அருளிய எந்த அர்த்த2த்தை, அதிலும் குறிப்பாக எந்தத் திருவாய்மொழியில் சொல்லப்படும் அர்த்த2த்தை இத்திருவெழுகூற்றிருக்கையிலே எப்படித் தெளிவுபடுத்துகிறார் திருமங்கையாழ்வார் என்னும் கேள்வி எழுகிறது. இதற்கு பதிலை இம்முன்னுரையில் முதலில் சுருங்கக்கூறிப் பிறகு விளங்கவைப்போம். அர்த்த2பஞ்சகங்களை விளக்கும் தமிழ் வேத3ங்களான நம்மாழ்வாரின் தி3வ்ய ப்ரப3ந்த4ங்களில் "நோற்ற நோன்பு" [5-7] முதலான நாலு திருவாய்மொழிகளிலும், "உலகமுண்டபெருவாயா" [6-10] என்னும் திருவாய்மொழியிலும் விளக்கப்படும் உபாயஸ்வரூபமாகிற அரும்பொருளை, அதிலும் குறிப்பாக "ஆராவமுதே" [5-8] என்னும் திருவாய்மொழியில் சொல்லப்படும் அர்த்த2த்தை இத்திருவெழுகூற்றிருக்கையிலே திருமங்கையாழ்வார் தெளிவுபடுத்துகிறார் என்பது முற்கூறிய கேள்விக்குச் சுருக்கமான பதில். எப்படித் தெளிவுபடுத்துகிறார் என்பதை விளங்கவைப்போம் இனி.

"எம்பெருமானுடைய திருவடிகளில் அவனுகப்புக்காகவே செய்யப்படும் கைங்கர்யமே பரமப்ராப்யம்; அதை அடைவதற்கு உபாயமாக நம்கையில் அணுவளவும் இல்லை, நிர்ஹேதுக கிருபையை உடைய அவன் ஒருவனே உபாயம்" என்பது ஸகலஶாஸ்த்ரங்களிலும், ஆழ்வார்களுடைய திவ்ய ப்ரபந்தங்களிலும் காணப்படும் பரமஸாரமான அர்த்தமாகும். இவ்வறிவையுடையவர்களே உண்மையான ப்ரபந்நராவர். அநாதிகாலமாகப் பழகிப்போந்த ஸ்வார்த்தபரதையாகிற சுயநல மனப்பான்மையாலும், அதனால் ஏற்படும் ஸ்வப்ரவ்ருத்திபரதையாகிற தன் முயற்சியில் ஈடுபாட்டாலும் மயங்கிவிடுகிறார்கள் சிலர். அவர்களில் சிலர் பரமபதத்திலும் எம்பெருமானை அநுபவிப்பதினாலும், மற்றும் சிலர் அவனுக்குக் கைங்கர்யம் செய்வதினாலும் தங்களுக்கு ஏற்படும் ஆனந்தத்தை உத்தேஶ்யமாக மயங்குகிறார்கள். அவ்வானந்தத்திற்கு உபாயமாகத் தாங்கள் அநுஷ்டிக்கும் பக்தி முதலானவற்றை முந்தியவர்களும், ஶரணாகதியாகிற ஸ்வகதஸ்வீகாரத்தைப் பிந்தியவர்களும் உபாயமாக மயங்குகிறார்கள். அன்னவர்களுக்கும் இந்த மயக்கத்தைத் தீர்ப்பதற்காகக் கடுமையான நியமங்களோடும், இந்த ஜீவாத்மாவின் அத்யந்தபாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபாநுஸந்தானத்தோடும் கூடியவையாய், வேதாந்த ஸித்தங்களான பக்தியோகத்தையும், ந்யாஸவித்யையாகிற உபாயப்ரபத்தியையும் (முறையே) விதிக்கிறான் எம்பெருமான். முற்கூறிய அநாதிவாஸனையாலே (முறையே) அந்த ஸ்வார்த்த பகவதநுபவத்திலோ, ஸ்வார்த்த பகவத் கைங்கர்யத்திலோ அவர்களுக்கு விருப்பம் மாறவில்லையாகில், அவர்கள் விருப்பப்படி பரமபதத்திலும் அவர்களுக்கு அப்பலன்களையே அளித்து விடுகிறான். ஸ்வாத்மாநுபவத்தையே விரும்பும் கைவல்யார்த்தியைப்போலே, நிரதிஶயபுருஷார்த்தமான பரார்த்தாநுபவ கைங்கர்யங்களை அவர்களும் பெறுவதில்லை. "தாம் அநுஷ்டிக்கும் எதிலும் உபாயத்வலேஶகந்த ப்ரஸங்கமுமில்லை, நிர்ஹேதுகக்ருபையோடு கூடிய எம்பெருமான் ஒருவனே மோக்ஷோபாயம்" என்னும் உண்மையை அறிந்தவர்களாய், பரார்த்த கைங்கர்யத்தில் ருசியைத் தெரிவிப்பதற்காகத் தாம் அநுஷ்ட்டிக்கும் ஶரணாகதியை அநுஷ்ட்டிக்கும்



போதே அந்த ஸ்வீகாரம் எம்பெருமானுடைய க்ருஷிபலமாயிருப்பதேயொழிய உபாயமன்று என்று அநுஸந்திப்பவர்களாய், இக்காரணத்தாலேயே ஸித்தோபாயநிஷ்டர்கள் என்றும், பரகதஸ்வீகாரநிஷ்டர்கள் என்றும் புகழப்படுபவர்களான தலைசிறந்த ப்ரபந்நர்களே எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபை யொன்றினாலேயே பரார்த்த கைங்கர்யமாகிற அப்பரமபுருஷார்த்தத்தைப் பெறுகிறார்கள்.—என்னும் திவ்யார்த்தம் ஆழ்வார்களுடைய திவ்ய ப்ரபந்தங்களாகிற திருப்பாற்கடலைக் கடைந்து பிள்ளை லோகாசார்யர் ஸ்ரீவசநபூஷணமாகிற திவ்யஶாஸ்த்ரத்திலே திரட்டிக்கொடுதத ஆராவமுதமாகும். இவ்வர்த்தத்தையே நம்மாழ்வார் முற்கூறிய ஐந்து திருவாய்மொழிகளிலும் காட்டியருளினர். அதையே இத்திருவெழுகூற்றிருக்கையிலே தெளிவுபடுத்துகிறார் திருமங்கையாழ்வார் என்பது இவற்றைப் பூர்வாசார்ய வ்யாக்யானங்களோடு சுவைப்பவர்களுக்கு எளிதில் விளங்கும். இவ்வைந்து திருவாய்மொழிகளுக்குள்ளும் குறிப்பாக ஆராவமுதாழ்வாரைப் பற்றிய "ஆராவமுதே" [5-8] என்னும் திருவாய்மொழியின் அர்த்தத்தைத் தெளிவுபடுத்துவது அவ்வாராவமுதனைப் பற்றிய இத்திருவெழுகூற்றிருக்கை என்பது இதையும் அத்திருவாய்மொழியையும் சேர்த்துப் படிப்பவர்களுக்கு எளிதில் விளங்கும். இதை அன்பர்கள் அறிந்து கொள்வதற்காகவே இம்முன்னுரையை ஒட்டி "ஆராவமுதே" என்னும் அத்திருவாய்மொழியை அளித்து, அதற்குப்பின் திருவெழுகூற்றிருக்கையை வ்யாக்யானங்களோடு அளிக்கிறோம்.

"ஒரு பேருந்தி" என்று தொடங்கி, "அயனை ஈன்றனை" "வாளியின் அட்டனை" "மூவுலகளந்தனை" "அரந்தையைத் தீர்த்தனை" "ஏழுலகு எயிற்றினில் கொண்டனை" "அறுசுவைப் பயனுமாயினை" "ஐம்படை அங்கையுள் அமர்ந்தனை" "அறிதுயில் அமர்ந்தனை" "வருணமும் ஆயினை" "பூதமும் நீயே" "ஏழ்விடை செற்றனை" "அறிவரு நிலையினை" "ஐம்பாலோதியை ஆகத்திருத்தினை" "அறமுதல்....விரிந்து நின்றனை" என்று சேதனனைப்பெற அநாதிகாலமாகப் பலவிதமாகக் க்ருஷி செய்துவரும் எம்பெருமான் பக்கலிலேயே உபாயபாவம்

பரிபூர்ணமாயிருப்பதையும், தன் கையில் ஏதுமில்லாதிருப்பதையும் காட்டி, "மாற்றே வினையே" என்று நிர்ஹேதுக கிருபையாலே அவனே ஸம்ஸாரஸம்ப3ந்த4த்தை அறுத்துத் தரவேணும் என்பதை உணர்த்தி. "அடியிணை பணிவன்" என்று அவன் திருவடிகளையே அதற்கு உபாயமாக உறுதிகொள்ளுவதை விளக்கும் இப்பிரப3ந்த3ம் உபாயஸ்வரூபத்தைத் தெளிவுபடுத்துவதுபோலே வேறு எப்பிரப3ந்த4மும் தெளிவுபடுத்தவில்லையன்றே. இது இப்பிரப3ந்த4த்தின் அர்த்த2த்தின் சீர்மையாகும்.

இனி, ஶப்3த3விசித்திரங்களும் நிறைந்தது இப்பிரப3ந்த4ம் என்பதும் இதை அநுஸந்தி4ப்பார்க்கு எளிதில் விளங்கும். ஒன்று முதல் ஏழு வரையில் உள்ள எண்கள் ஏறி இறங்கி வருவதையும், அதனாலேயே இது 'எழுகூற்றிருக்கை' என்னும் பெயருள்ள சித்திரகவியாயிருப்பதையும். இப்பிரப3ந்த4ம் ரத2ப3ந்த4மாய் அமைக்கத்தக்கதாயிருப்பதையும் பழைய நாலாயிர தி3வ்யப்ரப3ந்த4 மூலப்பதிப்புகளிலும், ஸ்ரீ காஞ்சி ஸ்வாமியின் தி3வ்யார்த்த2தீ3பிகையுரையிலும் காணலாம்.

இத்தகைய அருமைபெருமைகளையுடைய இந்த தி3வ்யப்ரப3ந்த4த்திற்குப் பரமகாருணிகரான பெரியவாச்சான் பிள்ளை இரண்டு வ்யாக்2யானங்கள் அருளியிருப்பது நமது ஸௌபா4க்3யப2லமாய் விளங்குகிறது. முதல் வ்யாக்2யானத்தை உபந்யஸித்தபிறகு வந்துசேர்ந்து அநுவர்த்தித்த (மெனக்கிட்ட) ஸ்ரீ வைஷ்ணவருக்கு இரண்டாவது வ்யாக்2யானத்தைப் பெரியவாச்சான்பிள்ளை உபந்யஸித்ததாக அதன் தலைப்பிலிருந்து விளங்குகிறது.

இவ்விரு வியாக்கியானங்களோடும், இவற்றின் பொருளைத் தெளிவுபடுத்தும் விவரணத்தோடும் கூடிய இத்திருவெழுகூற்றிருக்கையின் அச்சுவேலை ஒரே மாதத்தில் பூர்த்தியாகி, பரித4ாவி பங்குனி உத்திரத்தில் நிறைவு பெற்றது பரகாலகவியின் பேரருளாலேயேயாகும்.

பரித4ாவி
பங்குனி உத்திரம்
(19—3—73)

தா3ஸன்,
ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
'ஸுத3ர்ஶனம்' ஆசிரியர்.

திருக்குடந்தை ஆராவமுதன் விஷயமாக

# நம்மாழ்வார் அருளிச்செய்த

## திருவாய்மொழி (5-8)

ஆராவமுதே யடியேனுடலம் நின்பாலன்பாயே,
நீராயலைந்து கரையவுருக்கு கின்றநெடுமாலே,
சீரார்செந்நெல் கவரிவீசும் செழுநீர்த் திருக்குடந்தை,
ஏரார்கோலம் திகழக்கிடந்தாய் கண்டேனெம்மானே. 1

எம்மானேயென் வெள்ளைமூர்த்தி யென்னையாள்வானே,
எம்மாவுருவும் வேண்டுமாற்றா லாவாயெழிலேறே,
செம்மாகமலம் செழுநீர்மிசைக்கண் மலரும் திருக்குடந்தை,
அம்மாமலர்க்கண் வளர்கின்றானே யென்நான்செய்கேனே. 2

என்நான்செய்கேன் யாரேகளைகண் (என்)னையென்செய்கின்றாய்,
உன்னாலல்லால் யாவராலு மொன்றும் குறைவேண்டேன்,
கன்னார்மதில்சூழ் குடந்தைக்கிடந்தா யடியேனருவாணாள்,
சென்னாளெந்நா ளந்நாளுனதாள் பிடித்தேசெலக்காணே. 3

செலக்காண்கிற்பார் காணுமளவும் செல்லும்கீர்த்தியாய்,
உலப்பிலானே யெல்லாவுலகு முடையவொருமூர்த்தி,
நலத்தால்மிக்கார் குடந்தைக்கிடந்தா யுன்னைக்காண்பான்நான்,
அலப்பாய், ஆகாசத்தைநோக்கி யழுவன்தொழுவனே. 4

அழுவன்தொழுவ னாடிக்காண்பன் பாடியலற்றுவன்,
தழுவல்வினையால் பக்கம்நோக்கி நாணிக்கவிழ்ந்திருப்பன்,
செழுவொண்பழனக் குடந்தைக்கிடந்தாய் செந்தாமரைக்கண்ணா,
தொழுவனேனை யுனதாள்சேரும் வகையேசூழ்கண்டாய். 5

சூழ்கண்டாயென் தொல்லைவினையை யறுத்துன்னடிசேரும்,
ஊழ்கண்டிருந்தே, தூராக்குழிதூர்த் தெனைநாளகன்றிருப்பன்,
வாழ்தொல்புகழார் குடந்தைக்கிடந்தாய் வானோர்கோமானே,
யாழினிசையே யமுதேயறிவின் பயனேயரியேறே. 6

அரியேறேயென் னம்பொற்சுடரே செங்கட்கருமுகிலே,
எரியேபவளக் குன்றே நாற்றோ ளெந்தாயுனதருளே,
பிரியாவடிமை யென்னைக்கொண்டாய் குடந்தைத்திருமாலே,
தரியேனினியுன் சரணந்தந்தென் சன்மங்களையாயே. 7

களைவாய்துன்பம் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்,
வளைவாய்நேமிப் படையாய் குடந்தைக் கிடந்தமாமாயா,
தளராவுடல மெனதாவி சரிந்துபோம்போது,
இளையாதுனதா ளொருங்கப்பிடித்துப் போதவிசைநீயே. 8

இசைவித்தென்னை யுன்தாளிணைக்கீ ழிருத்துமம்மானே,
அசைவிலமரர் தலைவர்தலைவா ஆதிப்பெருமூர்த்தி
திசைவில்வீசும் செழுமாமணிகள் சேரும்திருக்குடந்தை,
அசைவிலுலகம் பரவக்கிடந்தாய் காணவாராயே. 9

வாராவருவாய் வருமென்மாயா மாயாமூர்த்தியாய்
ஆராவமுதா யடியேனுவி யகமேதித்திப்பாய்,
தீராவினைகள் தீரவென்னை யாண்டாய் திருக்குடந்தை,
ஊரா. உனக்காட் பட்டுமடியே னின்னமுழல்வேனோ. 10

உழலையென்பின் பேய்ச்சிமுலையூ டவளையுயிருண்டான்,
கழல்களவையே சரணாக்கொண்ட குருகூர்ச்சடகோபன்,
குழலில்மலியச் சொன்ன வோரா யிரத்துளிப்பத்தும்,
மழலை தீர வல்லார்காமர் மானேய்நோக்கியர்க்கே. 11

திருவாய்மொழியில் ஐந்தாம் பத்து எட்டாம்
திருவாய்மொழி நிறைவுபெற்றது.
நம்மாழ்வார் திருவடிகளே ஶரணம்.

வேதம் தமிழ்செய்த மாறனின் இத்திருவாய்மொழிக்கு விவரணமாய் அமைந்ததாய், 'மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்த மங்கையர்கோன்' அருளியதான திருவெழுகூற்றிருக்கை, தனியன் வ்யாக்₂யானத்தோடும், பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிய இரு வ்யாக்₂யானங்களோடும், 'ஸுத₃ர்ஶனம்' ஆசிரியர் இயற்றிய விவரணத்தோடும், பதவுரை அரும்பதவுரைகளோடும் இனி அளிக்கப்படுகிறது.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



## பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த
# திருவெழுகூற்றிருக்கைத் தனியன்
## வ்யாக்யானம்

4-8-05

அவதாரிகை:— எம்பெருமானுக்குத் திருமதிள்போலே அரணாயிருப்பதான ஆறு ப்ரப₃ந்த₄ங்கள் செய்தருளின ஆழ்வாருடைய திருநாமங்கள் பலவற்றையும் சொல்லி அவரை வாழ்த்துகிறது இதில். "प्रत्यक्षे गुरवः स्तुत्याः" (ப்ரத்யக்ஷே கு₃ரவஸ் ஸ்துத்யா:) என்னக்கடவதிறே. ஆழ்வார்கள் அர்ச்சாவதாரமாய் எப்போதுமெல்லார்க்கும் ப்ரத்யக்ஷராயிறேயிருப்பது.

---

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

'ஸுத₃ர்ஶந' பத்ராதி₄பர் இயற்றிய

# திருவெழுகூற்றிருக்கைத் தனியன்
## வயாக்₂யான விவரணம்

அவதாரிகை:— எம்பெருமானுக்குத் திருமதிள்போலே அரணாய் (ரக்ஷகமாய்) இருப்பவையான பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரியதிருமடல், திருநெடுந்தாண்டகம் என்னும் ஆறு பிரபந்தங்கள் அருளிச்செய்த ஆழ்வாருடைய திருநாமங்கள் பலவற்றையும் சொல்லி அவருக்கு மங்க₃ளாஶாஸநம் செய்கிறது இத்தனியனில். "ஆசார்யர்கள் நேரில் துதிக்கத்தக்கவர்கள்" என்று ப்ரமாணம் கூறுகின்றது. இவ்வாழ்வாரும் அர்ச்சாவதாரமாய் தி₃வ்யதே₃ஶங்களில் ப்ரத்யக்ஷமாய் எழுந்தருளியிருக்கிறார். அத்தகைய இவருக்குப் பல்லாண்டு பாடுகிறது இத்தனியன் என்கை.

## எம்பெருமானாருளிச்செய்த தனியன்

வாழி பரகாலன் வாழி கலிகன்றி,
வாழிகுறையலூர் வாழ்வேந்தன்,—வாழியரோ
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள்மங்கையர்கோன்
தூயோன் சுடர்மான வேல்.

பரகாலன்—புறமதத்தவர்கட்கு யமன்போன்ற திருமங்கையாழ்வார், வாழி—வாழ்ந்திடுக; கலிகன்றி—கலியைக் கெடுத்த திருமங்கையாழ்வார், வாழி—வாழ்ந்திடுக. குறையலூர்—திருக்குறையலூர். வாழ்—வாழும்படி. வேந்தன்—(அதன்) அரசரான திருமங்கையாழ்வார். வாழி—வாழ்ந்திடுக; மாயோனை —எம்பெருமானிடத்தினின்று. வாள் வலியால்—தமது வாளின் வலிமையினால். மந்திரம் கொள்—திருமந்திரத்தைப் பெற்றவராயும். தூயோன்—அகப்புறத் தூய்மையுடையராயுமிருக்கிற, மங்கையர்கோன்-திருமங்கையாழ்வாரது. சுடர்—ஒளிபொருந்தியதும். மானம்—பெருமை பொருந்தியதுமான. வேல்—வேலானது. வாழி—வாழ்ந்திடுக. (அரோ—அசை.)

வ்யாக்2யாநம்:—(வாழிபரகாலன்) ப4க3வத்3த்3விட்டுக்களான ப்ரதிகூலர்க்குக் காலனானவர் வாழி. (வாழிகலிகன்றி) கலிதோ3ஷ நிவாரகர் வாழி. (குறையலூர் வாழ்வேந்தன்—வாழி) திருக்குறையலூரை அவதாரஸ்த2லமாக உடைய

---

வ்யாக்2யாநம்:—(வாழி பரகாலன்) பரகாலன் என்று பெயர்பெற்ற ஆழ்வார்க்குப் பல்லாண்டு. பரர் (பிறர்) என்று ப4க3வானை த்3வேஷிக்குமவர்களைச் சொல்லுகிறது. அவர்களுக்குக் காலன்போலே ப4யங்கரராயிருப்பதால் இவர் பரகாலனாகிறார். (வாழிகலிகன்றி) கலிகன்றி [கலியின் குற்றத்தைப் போக்கவல்லவர்] என்று பெயர்பெற்றவருக்குப் பல்லாண்டு. (குறையலூர் வாழ்வேந்தன் வாழி) திருக்குறையலூரைப் பிறப்பிடமாகவுடையவராய், அவ்வூர்வாழும்படி அதை ரக்ஷிக்கிற அரசனாயிருப்பவர் வாழ்க. அவ்வூரில்



ராய். அது வாழும்படிக்கு அத்தை நோக்குகிற ராஜாவென்னுதல்; அங்கே வாழுகிறவரென்னுதல். (மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன் தூயோன் சுடர் மானவேல்-வாழியரோ) என்று-ஆழ்வாரையும், அவர் திருக்கையில் வேலையும் ஒருகாலே ஆஶாஸித்தபடி. (மாயோனை) அரங்கத்தரவணைப் பள்ளிகொள்ளும் மாயோனையிறே வாள்வலியால் மந்திரங்கொண்டது. தென்னரங்கன்தன்னை வழிபறித்த வாளனிறே. கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டவரிடத்திலேயிறே மந்திரப்பொருள் கைக்கொண்டது. மந்திரத்தைப்பற்றி

---

வாழ்கிறவர் என்றும் பொருள் கொள்ளலாமாயினும், தன் ஆட்சியாலே அவ்வூருக்கு வாழ்ச்சியளிப்பவர் என்னும் முதற்பொருளே சிறப்புடையது. இனி அவருக்கும் அவரது வேலுக்கும் ஒருசேரப் பல்லாண்டு பாடுகிறார்,—(மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன் தூயோன் சுடர்மான வேல்) என்று. (மாயோனை) "கடியரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும் **மாயோனை**" [பெருமாள் திருமொழி 1-2] என்று குலசேகராழ்வாரால் பாடப்பட்ட ஆஶ்சர்யபூ4தனான மாயோனையன்றோ தனது வாள்வலியைக் காட்டி வெருட்டி இவர் மந்திரோபதே3ஶம் பெற்றார். "வாழி சுழி பொறித்த நீர்ப்பொன்னித் தென்னரங்கன் தன்னை வழி பறித்த வாளன் வலி" [இயல் சாத்து 2] என்று இவர் வாள்வலியாலே மந்திரங்கொண்டது தென்னரங்கனிடமே என்றல்லவோ சொல்லப்படுகிறது. "கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார் காவிரி நீர் செய்ப் புரள ஓடும் திருவரங்கச் செல்வனார்" [நாச்-திரு 11-6] என்கிறபடியே தன்னை ஆசைப்பட்டவர்களின் கையிலிருப்பதையெல்லாம் அபஹரிக்கும் அவரிடமே திருமந்திரப்பொருளை அபஹரித்த இவரது திறமையை என்னென்று புகழ்வது? "அந்தணர் மாட்டந்தி வைத்த மந்திரம்" [திருநெடு 4] என்று மந்திரமாகச் சொல்லப்படும் எம்பெருமானைப் பற்றியன்றோ இவர்

யிறே மந்திரங்கொண்டது. (மங்கையர்கோன்) மங்கை மன்னனிறே. (தூயோன்) தூய்மையென்னும் பாஹ்யாப்யந்தர சுத்தியையுடையவர். "அங்கமலத்தடவயல் சூழாலிநாடனருள்மாரியரட்டமுக்கியடையார்சீயம்கொங்கு மலர்க்குழலியர்வேள் மங்கைவேந்தன் கொற்றவேல் பரகாலன் கலியன்" என்று தாமே தம் திருநாமங்களைக் கூறினாரிறே. (சுடர்மானவேல்) தேஜோரூபமான. மான வேல்—பெரியவேல். திருமங்கை மன்னன் எடுக்கும்படியான வேல். (வாழியரோ) இத்தால்—ஆழ்வாரோபாதி ஆயுதமும் ஆஸ்யமென்றபடி. "நின் கையில் வேல்

---

திருமந்திரத்தைக் கொண்டார். (மங்கையர்கோன்) திருமங்கை நாட்டுக்கு மன்னனன்றோ இவர். (தூயோன்) அநந்யார்ஹசேஷத்வம் [எம்பெருமானைத் தவிர வேறெவர்க்கும் அடிமைப்படாமலிருக்கை] அநந்யசரணத்வம் [எம்பெருமானைத் தவிர வேறு எதையும் உபாயமாகக் கொள்ளாதிருக்கை], அநந்யபோக்யத்வம் [எம்பெருமானைத் தவிர வேறு எதையும் அநுபவிக்கத்தக்கதாகக் கொள்ளாதிருக்கை] முதலான அகத்தூய்மைகளையும், பஞ்சஸம்ஸ்காரம் உடையராயிருக்கை முதலான புறத்தூய்மைகளையும் உடையவர். இப்பாசுரத்தில் இவர்க்குச் சொல்லப்பட்ட திருநாமங்களையும் பெருமைகளையும் மற்றும் பலவற்றையும் "அங்கமலத்தடவயல்சூழ் ஆலிநாடன் அருள்மாரி அரட்டமுக்கி அடையார்சீயம் கொங்குமலர்க் குழலியர்வேள் மங்கை வேந்தன் கொற்றவேல் பரகாலன் கலியன்" [பெரியதிருமொழி 3-4-10] என்று இவ்வாழ்வார்தாமே அருளிச்செய்தாரன்றோ. (சுடர் மான வேல்) சோதியுருவான பெரிய வேல். பிரகாசத்திலும் பெருமையிலும் திருமங்கைமன்னன் கைக்கொள்ளத் தகுதியுடைய வேல் என்றபடி. (தூயோன் வேல் வாழியரோ) ஆழ்வாரைப்போலே அவரது வேலும் பல்லாண்டு பாடத்தக்கது என்று கருத்து. "நின் கையில் வேல் போற்றி" [திருப்பாவை 24] என்று கண்ணனுக்குப் பல்லாண்டு



போற்றி" என்னக்கடவதிறே. இதுதான். கொற்றவேலாகையாலே வெற்றிவேலாயிருக்கும். அத்தாலே— இதின் விஜயத்தை வேண்டுகிறது.

பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த
திருவெழுகூற்றிருக்கைத் தனியன் வ்யாக்யாநம் முற்றிற்று.

---

பாடினவர்கள் அவன் கையில் வேலுக்கும் பல்லாண்டு பாடினார்களன்றோ. இவ்வேலின் பெருமையை "கொற்றவேல்" [பெரியதிரு 3-4-10] என்று ஆழ்வாரே அருளிச் செய்தாராகையாலே மற்ற வேல்களைப்போலே தோல்வி காணமல் இது வெற்றிவேலாகவேயிருக்கும். ஆயினும் தமது பரிவின் மிகுதியாலே இவர் இதற்கும் பல்லாண்டு பாடுகிறார்.

திருவெழுகூற்றிருக்கைத்
தனியன் வ்யாக்யான விவரணம் முற்றிற்று.

## மற்றொரு தனியன்

[இத்தனியனுக்குப் பிள்ளைலோகம் ஜீயர் வ்யாக்யானமில்லை. ஆகையால் இதற்குப் பதவுரை மாத்திரம் கொடுக்கப்படுகிறது.]

சீரார்திருவெழு கூற்றிருக்கையென்னும் செந்தமிழால்,
ஆராவமுதங் குடந்தைப்பிரான்ற னடியிணைக்கீழ்,
ஏரார்மறைப்பொரு ளெல்லாமெடுத்திவ் வுலகுய்யவே,
சோராமற்சொன்ன வருள்மாரிபாதம் துணைநமக்கே.

சீர்—சொற்பொருள் சிறப்புகளாலே. ஆர்—நிறைந்த. திருவெழுகூற்றிருக்கை என்னும் — திருவெழுகூற்றிருக்கை என்று பெயர்பெற்ற, செம் தமிழால்—அழகிய தமிழ்நூலால், ஆராவமுதன்—ஆராவமுதன் என்று பெயர்பெற்ற குடந்தை பிரான்தன்—திருக்குடந்தைப் பெருமானுடைய, அடி இணை கீழ்—இரு திருவடிகளின் விஷயமாக, ஏரார் மறை பொருள் எல்லாம் எடுத்து-(அபௌருஷேயத்வம் முதலான) சிறப்புக்களுடைய வேதங்களில் சொன்ன அர்த்தங்கள் அனைத்தையும் விளங்கக்காட்டி, இவ்வுலகு உய்யவே—இவ்வுலகம் உஜ்ஜீவிக்கும்படி, சோராமல் சொன்ன—ஒன்று விடாமல் சொன்ன, அருள்மாரி — அருள்மழையாம் திருமங்கையாழ்வாருடைய பாதம—திருவடிகளே, நமக்கு துணை—நமக்குத் தஞ்சமாகும்.

# திருவெழுகூற்றிருக்கைக்குப்

## பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த வ்யாக்4யாநம்

### ப்ரவேஶம்

ஸம்ஸாரஸ்வபா4வாநுஸந்தா4நத்தாலே மிகவும் அவஸந்நரான ஆழ்வார் அதுக்குப் பரிஹாரமாக அவன்

---

ஸு1தர்ஶந பத்ராதி4பர் இயற்றிய

## தி3வ்ய ப்ரப3ந்த4 ஸாரம்

# திருவெழுகூற்றிருக்கை விவரணம்

நாலுவேத3ங்களை நாலு தி3வ்யப்ரப3ந்த4ங்களாக்கியருளினார் வேத3ம் தமிழ் செய்த மாறன். அவ்வேத3ங்களுக்கு அமைந்த ஆறு அங்க3ங்கள் போலே இவ்வேத3ங்களுக்கு ஆறங்க3ங்கூறினார் திருமங்கையாழ்வார் தமது ஆறு தி3வ்யப்ரப3ந்த4ங்களாலே.

அவற்றில் முதலான பெரிய திருமொழியில்—எம்பெருமான் பரமரஸிகரான தம்மைத் தன் அழகைக்காட்டித் திருத்தியபடியையும், திருமந்திரத்தையும், அதன் பொருளான பரத்வஸௌலப்4யாதி3 கல்யாண கு3ணங்களையும், ஸௌலப்4யாதி3 கல்யாண கு3ணங்களுக்கு எல்லை நிலமான அர்ச்சாவதாரங்களையும் காட்டிக்கொடுக்கக் கண்டு அநுப4வித்த படியையும், ஸம்ஸாரத்தில் தமக்கு வெறுப்பு ஏற்படுவதற்காக அதன் தாழ்வைக் காட்டிக்கொடுக்க, "மாற்றமுள" [11-8] என்னும் கடைசித்திருமொழியிலே "இருபாடு எரி கொள்ளியின் உள் எறும்பேபோல்" [4] என்றும், "பாம்போடு ஒரு கூரையிலே பயின்றாற்போல்" [3] என்றும், "வெள்ளத்திடைப்பட்ட நரியினம் போலே" [5] என்றும், "காற்றத்திடைப்பட்ட கலவர் மனம் போல்"

---

அரு:— ப்ரவேஶே—திருமொழியில்—உகந்தருளின நிலங்களை அநுப4வித்துப் பரமபத3த்தையும் ஸம்ஸார ஸ்வபா4வத்தையும



கு3ணங்களை நெஞ்சாலே நினைத்தும் வாயாலே பேசியும், திருவடிகளிலே விழுந்தும் த4ரித்தார். "இங்ஙனே கிடந்து

---

[2] என்றும், "ஆற்றங்கரை வாழ் மரம்போல்" [1] என்றும், ஸம்ஸாரத்தின் தாழ்வை நினைத்து மிகவும் அஞ்சி நடுங்கித் தள்ளாடி உருகித் தாம் வருந்தியபடியையும் அறிவித்தார் ஆழ்வார்.

இரண்டாவது ப்ரப3ந்த4மான திருக்குறுந்தாண்டகத்திலே—கோடை வெய்யிலால் வருந்தியவர்கள் குளிர் நீரிலே விழுந்து நீரைக்குடிப்பதும், அதை வாரி மேலே இறைத்துக் கொள்வதும் செய்வது போலே, "மாற்றமுள" திருமொழியில் கூறியபடி ஸம்ஸாரமாகிற கடுங் கோடை வெய்யிலால் வருந்திய தாமும் அவ்வெப்பத்திற்குப் பரிஹாரமாக, எம்பெருமானும், அவனது கு3ணங்களுமாகிற குளிர் நீரிலே குடைந்தாடி, "என் மனத்து வந்த விதியினை...விடுகிலேனே" [1] "குணங்கொண்டுள்ளம் கூறு நீ கூறுமாறே" [2] என்று நெஞ்சாலே நினைத்தும், "நின்னையே பரவுவேனே" [11] என்று வாயாலே பேசியும், "கண்ணிணை களிக்குமாறே" [13] என்று கண்ணாலே கண்டும் "மைந்தனை வணங்கினேனே" [3] என்று திருவடிகளிலே விழுந்து தலையாலே வணங்கியும் "வாக்கினால் கருமந்தன்னால் மனத்தினால் சிரத்தைதன்னால் வேட்கை மீதூரவாங்கி விழுங்கினேற்கு" [4] என்கிறபடியே ஸர்வகரணங்களாலும் ஈடுபட்டும் உயிர் த4ரித்தார். இந்நிலையிலே திருவெழுகூற்றிருக்கையாகிற இம்மூன்றாவது பிரபந்தம் அவதரிப்பதற்குறுப்பாக ஆழ்வார்க்கும் எம்பெருமானுக்கும் பின்வருமாறு ஓர் ஸம்வாத3ம் ஏற்பட்டது:—

---

மறந்திருக்க "நீரிருக்கிறது ஸம்ஸாரங்கிடீர்" என்று மாற்றமுளவிலே காட்ட, ப்ரதிகோடியை யநுஸந்தி4த்துவந்த ஆற்றாமையாலே "வாக்கினால் கருமந் தன்னால் மனத்தினால் சிரத்தை தன்

நோவுபடும் உமக்குத்தான் செய்யவேண்டுவதென்?" என்று கேட்க, "த்வத3நுப4வவிரோதி4யாயிருக்கிற ஸம்ஸாரத்தை வாஸனையோடே போக்கித்தரவேணும்" என்றார்; "அதுபின்னை நம்மால் செய்யலாவதன்றே" என்ன,

---

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை
மெனக்கிட்ட ஸ்ரீவைஷ்ணவருக்காக ஸாதித்தருளின

## வ்யாக்யாநம்

### அவதாரிகை

முதலிலே கரணகளேப3ரவிது4ரமாய், தமோபூ4தமாய், அவிஜ்ஞேய ஸ்வரூபமாய், அசித்கல்பமாயிருக்கிற இவற்றை, அர்த்தி2த்வாதி3 நிரபேக்ஷமாக உன்னுடைய நிரவதி4கத3யையாலே உண்டாக்கின நீயேயருளிக் கடாக்ஷியாயாகில், **"अमूनि भुवनानि भवितुं नालं"** (அமூநி பு4வநாநி ப4விதும் நாலம்) முதலிலே இவையுண்டாகவேமாட்டாது. ஸத்தையே தொடங்கி உன்னதீ4நமான பின்பு உன்னையொழிய இவற்றுக்கு ஒரு ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி கூடாதென்னுமிடம் சொல்லவேணுமோ? இதில்லாதவன்று உண்டாக்கின நீயே இதுக்கொரு போக்கடி பார்க்கையொழிய நானொன்றுசெய்து உன்னைப்பெறுகையென்றொரு பொருளுண்டோ?

---

எம்பெருமான்—இவ்வண்ணமாக மிக வருந்தும் உமக்கு நான் செய்யவேண்டியது என்ன?

ஆழ்வார்—திருக்குறுந்தாண்டகத்திலே தேவரீரை அடியேன் ஒருவாறு அநுப4வித்தேனாயினும், அவ்வநுப4வம் பூர்ணமாக ஏற்படாதபடி இந்த ஸம்ஸாரஸம்ப3ந்த4ம் தடையாயுள்ளது. இதை வாஸனையோடே நீக்கியருளவேணும்.

எம்பெருமான்— அரிய பெரிய ஸாத4னங்களை அநுஷ்டி2த்து அதை நீர் போக்கிக் கொள்ள வேணுமேயொழிய, நீர் கேட்ட மாத்திரத்தில் நான் உமக்கு அதைப்போக்கிவிட முடியாதே!

---

னால்" என்று திருக்குறுந்தாண்டகத்திலே கரணத்ரயத்தாலும் அநுப4வித்து த4ரிக்கப்புக, அதில் த4ரிக்கப்புகாமையாலே இதிலே ஶரணம் புகுகிறாரென்றபடி.



" உன்னையொழிந்த ஸகல பதா3ர்த்த2ங்களினுடைய

---

ஆழ்வார்— எம்பெருமானே! ஸ்வார்த்த2தையாகிற சுயநல மனப்பான்மையிலும் அதற்கு உறுப்பான ஸ்வப்ரவ்ருத்தியாகிற தன்முயற்சியிலும் எனக்குப் பற்று உள்ளதோ என்று சோதிப்பதற்காக நீ சொல்லும் வார்த்தை இது என்பதை நான் அறியேனோ! உடைமையான என்னை உடையவனான நீ அடைவதற்கு அநாதி3காலமாக எத்தனை பாடுபட்டு வருகிறாய்? எனக்குச் சில இன்பங்களை நான் ஸாதி4த்துக்கொள்வதாக நினைத்து எதையாவது செய்து, நீ படும் பாடுகளை ஸப2லமாகாதபடி தடுத்துவீணாக்கிவருவதையன்றோ அநாதி3காலமாக என் முயற்சிகளால் நான் செய்து வருகிறேன். என்னையும் என்னைப் போன்ற மற்ற சேதனரையும் பெறுவதற்கு அநாதி3காலமாக நீ எத்தனை பாடுபட்டு வருகிறாய்? ப்ரளயகாலத்திலே தே3ஹேந்திரியங்களற்றவர்களாய், 'அவிப4க்ததமஸ்' என்னும் பெயருடன் உன்னோடு ஒன்றியிருந்த அசேதனதத்துவமான மூலப்ரக்ருதியோடு பிரித்துக்காண வொண்ணாதபடி கலந்திருந்தோமன்றோ நாங்கள்; இப்படி அசேதனப் பொருளை ஒத்திருந்த எங்களை, நாங்கள் யாசிக்காமலிருந்தபோதே உன்னுடைய எல்லையற்ற கருணையாலே, தே3ஹேந்திரியங்களோடே படைத்து நிர்ஹேதுககிருபையாலே நீயே அருள் செய்து கடாக்ஷிக்காவிடில், 'இவ்வுலகங்கள் உண்டாகவேமாட்டா' [ஸ்தோ-ர 10] என்று சொல்லலாம்படி நாங்கள் ஒரு பொருளாக உண்டாகவே மாட்டோமே. இப்படி எங்களுடைய ஸத்தை முதலாக அனைத்துமே உன்னதீ4னமானபின்பு, உன்னையொழிய எங்களுக்கு ஒரு முயற்சியாகிற ப்ரவ்ருத்தியும், முயற்சியினின்றும் கைவாங்குதலாகிற நிவ்ருத்தியும் ஏற்படமாட்டாது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? இப்படி எதுவுமே என்னதீ4னமல்லாதபோது என்னை உண்டாக்கின நீயே என்னை ரக்ஷிக்க ஒரு வழிதேட

*உத்பத்தியென்ன, ரக்ஷணமென்ன, இவற்றுக்குக் கடவையாய், ஸர்வஸமாஶ்ரயணீயனாய், ஆபத்ஸக$_2$னாயிருக்கிற*

---

[சரணமறைபயந்த இத்யாதி$_3$] ஜ்ஞாநாதி$_4$கனான சதுர்முக$_2$னோடேகூட உத்பத்தி விநாஶாதி$_3$களுக்குக் கர்மீப$_4$விக்கிற ஸகல சேதநர்க்கும் ரக்ஷையென்று பெற்றபெற்றவையெல்லாம், "நம்மேல் வினைகடிவான்" என்கிறபடியே ஆஶ்ரித விரோதி$_4$ நிரஸநத்துக்காகக் கையிலே திருவாழியை த$_4$ரித்துக்கொண்டிருக்கிற உபகாரகனான அவன் பார்க்கில் பார்க்குமித்தனையல்லது, வேறு கடல்சூழ்ந்த பூ$_4$மியிலுள்ள சேதநர் தங்களுக்கு ரக்ஷை தாங்களறியார்கள். அவனையொழிய இவையறியாதொழிய வேண்டுகிறதென்

---

*வேண்டுமேயொழிய நான் ஒரு கார்யம் செய்து உன்னைப் பெறுவது என்று பேசத்தான் முடியுமோ? இதையேயன்றோ*

'சரணமறை பயந்த தாமரையானோடு
மரணாய மன்னுயிர்கட்கெல்லாம்—அரணாய
பேராழிகொண்ட பிரானன்றி மற்றறியாது
ஓராழி சூழ்ந்த உலகு'. [முதல் திருவ 60]

*என்று பொய்கையாழ்வார் அருளிச்செய்தார். உலகினர் உய்வதற்கு உபாயங்களை உபதே$_3$ஶிக்கும் வேத$_3$த்தை அளித்த ஞானச்சிறப்புடைய பிரமன் முதலாகப் பிறப்பிறப்புக்களுக்கு ஆளாகும் எல்லாச் சேதனர்க்கும் ரக்ஷை என்று பேர்பெற்ற ஒவ்வொரு காரியத்தையும் "நம்மேல் வினைகடிவான் எப்போதும் கைகழலாநேமியான்" [பெரிய திருவ 87] என்கிறபடியே அடியாருடைய விரோதி$_4$களை அழிப்பதற்கு உறுப்பாக எப்போதும் திருவாழியாழ்வானை ஏந்திக்கொண்டிருக்கும் உபகாரகனான நீ செய்தால் செய்யலாமேயொழிய, கடல்சூழ்ந்த இவ்வுலகில் உள்ள வேறு எவரும் தங்களுக்கு ரக்ஷை எது என்பதைத் தாங்கள் அறியக்கூடமாட்டார்களே! தங்களுக்குத் தாங்கள் ரக்ஷையைச் செய்துகொள்ள எப்படி முடியும்?*



*நீயே என்னுடைய ஸம்ஸாரது$_3$:க்க$_2$த்தைக் கழித்துத் தரு*

---

னென்னில்— "**नैव किञ्चित् इत्यादि**" (நைவ கிஞ்சித் இத்யாதி$_3$) உனக்குப் பரோக்ஷமாயிருப்பதொன்றில்லை; எத்தனையேனும் ஜ்ஞாநாதி$_4$கரா யிருப்பார்க்கும் நீ கண்ணுக்கு விஷயமாகாய்; உனக்குக் கைபுகுராதது ஒன்றுமில்லை; எத்தனையேனுமதிஶயித ஜ்ஞாநர்க்கும் நீ கைபுகுந்தாயாயிராய். இத்தால் சொல்லிற்றாயற்றதென்னென்றால், ஒருவனுக்குக் கண்ணும் தோற்றாதே காலும் நடைதாராதே யிருப்பது, ஒருவனுக்குக் கண்ணுந்தோற்றிக் காலும் நடைதருவது, இப்படியிருந்தால் ஆர் வழி காட்டிக்கொடு

---

எம்பெருமான் — *ஜ்ஞாநாதி$_4$கர் பலர் இருக்கும்போது வேறு எவரும் தங்கள் ரக்ஷையைத் தாங்கள் அறியக்கூடமாட்டார்கள் என்று எப்படிச் சொல்லலாம்?*

ஆழ்வார்—"நைவ கிஞ்சித் பரோக்ஷம் தே ப்ரத்யக்ஷோऽஸி ந கஸ்யசித்। நைவ கிஞ்சித$_3$ஸித்$_3$த$_4$ம் தே ந ச ஸித்$_3$தோ$_4$ऽஸி கஸ்யசித்॥" *[ஜிதந்தே 1-6] [உனக்கு ப்ரத்யக்ஷமல்லாததாயிருப்பது எதுவுமில்லை; நீ எவர்க்கும் (தம் முயற்சியாலே) ப்ரத்யக்ஷமாக (கண் முதலானவற்றால் அறியத்தக்கவனாக) ஆகிறாயல்லை; உனக்கு அடையமுடியாதது எதுவுமில்லை; எவர்க்கும் (தம் முயற்சியாலே) நீ அடையமுடியாதவனாயிருக்கிறாய்.]* என்கிறபடியே உன்னால் அறியவும், அடையவுமாகாதது எதுவுமேயில்லை என்னும்படி ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியாயிருந்தாய் நீ; எத்தனையேனும் சிறப்புற்ற ஜ்ஞாநஶக்தியுடையாரும் உன்னைத் தம் முயற்சியால் அறியவோ அடையவோ பார்த்தால் அவர்களால் அறியவோ, அடையவோ முடியாதவனாகவே யிருக்கிறாய் நீ. உனக்கும் எங்களுக்கும் உள்ள வாசி எப்படியிருக்கிறதென்பதை ஓர் உதா$_3$ஹரணத்தால் விளக்கலாம். ஒருவனுக்குக் கண்ணும் குருடாய் காலும் முடமாயிருக்கிறது; ஒருவன் நல்ல கண் பார்வையையும் நடையையும் உடையவனாயிருக்கிறான். இப்படியிருக்கும் இருவரில் இரண்டாமவன் வழிகாட்டினாலொழிய முதலவனாலே தன் காரியம்

*மித்தனையல்லது என்னுல் கழித்துக்கொள்ளப்போகாது"*

---

போவார்கள் ? நான் அஜ்ஞனுய் அஶக்தனுயிருந்தேன்; நீ ஸர்வ ஜ்ஞனுய் ஸர்வ ஶக்தியாயிருந்தாய்; இங்ஙனே யிருந்தபின்பு நீ என் கார்யஞ்செய்து தலைக்கட்டு மித்தனை போக்கி நான் என் கார்யம் செய்து தலைக்கட்டுகை என்றொரு பொருளுண்டோ? என்கிறார். நீ தந்த ஜ்ஞாநங்கொண்டு அறியப் பார்த்தாலும் அறிந்தபடி செய்து தலைக்கட்டுகைக் கீடான ஶக்தியெனக்குண்டோ ?

அவதாரிகை முற்றிற்று.

---

*எதையும் தான் செய்துகொள்ள முடியாதன்றே. அது போலே நான் அறிவொன்றுமில்லாத குருடனுய், எதுவும் செய்யமுடியாத அஶக்தியுடைய நொண்டியாயிருப்பவன். "ஸர்வஜ்ஞ: ஸர்வவித்" என்று வேத$_3$மே ஓதுகின்றபடி நீ எல்லாமறிந்தவனுய், எல்லாம் வல்லவனுயிருக்கிறுய். இப்படியிருக்கும்போது, நீ என் காரியத்தைச் செய்து முடிக்கவேண்டுமேயொழிய, நான் என் காரியத்தைச் செய்து முடிப்பதற்குச் சிறிதாவது இடமுண்டோ? நீ அளித்த அறிவுகொண்டு ஒருவாறு அறிந்தாலும், அறிந்த படி செய்து முடிக்கவல்ல ஶக்தி எனக்கு உண்டோ? ஆகையால், உன்னைத் தவிர்ந்த எல்லாப்பொருள்களின் உத்பத்தி, ரக்ஷணம் முதலான அனைத்தையும் செய்பவனுய், பிரமன் உருத்திரன் முதலிய அனைவராலும் ஆஶ்ரயிக்கப் படுபவனுய், அவர்களுக்கு வரும் ஆபத்துக்கள் ஒவ்வொன்றி லும் துணைபுரிகின்றவனுயிருக்கிற நீயே என்னுடைய ஸம்ஸாரத் துன்பத்தைக் கழித்துத் தரவேணுமேயொழிய என்னுல் அதைக் கழித்துக்கொள்ள அடியேனுல் ஆகாது."— என்று எம்பெருமான் திருவடிகளிலே விழுந்து தம் போக் கடியற்ற நிலையை எம்பெருமானிடம் அறிவிக்கும் ப்ரப$_3$ந்த$_4$மே இத்திருவெழுகூற்றிருக்கையாகும்.*

*புதையலிருக்குமிடத்தைக் காட்டிக்கொடுக்கும் செப் பேட்டைக்கையிலே கொடுத்து, அதைக்கொண்டு புதையலைக்*



*என்று திருவடிகளிலே விழுந்து தம் த$_3$ஶையை அறி விக்கிறுரா யிருக்கிறது.*

அவதாரிகை முற்றிற்று.

---

*காட்டிக்கொடுப்பாரைப்போலே, திருமந்திரத்தையும் (திரு வஷ்டாக்ஷரத்தையும்) அதில் ப்ரதி$_4$பாதார்த்த$_2$மான ஸௌ லப்$_4$யம் முதலான கு$_3$ணங்களுக்கு எல்லைநிலமான அர்ச்சா வதார ஸ்த$_2$லங்களான கோயில்களையும் காட்டிக்கொடுக்க, திருப்பிரிதி தொடங்கித் திருக்கோட்டியூரீருகவுள்ள அவை யனைத்தையும் கண்டு, இதற்குமேல் எதுவும் தேவையில் லாதவராய், ஸம்ஸாரத்தையும் பரமபத$_3$த்தையும் ஒருசேர மறந்துவிட்டார் இவ்வாழ்வார் பெரியதிருமொழி யநுப$_4$ வத்தின் பெரும்பகுதியிலே. "அர்ச்சாவதாராநுப$_4$வத்தில் மூழ்கி, ஸம்ஸாரத்தின் கொடுமையையும், இவ்வநுப$_4$வம் நித்யமாய் நடப்பதற்குப் பரமபத$_3$த்திற்குச் செல்ல வேண்டும் என்னும் உண்மையையும் இவர் மறந்து விட்டாரே! இவர்க்கு இந்த ஸம்ஸாரத்தின் கொடுமையை உணர்த்துவோம்" என்று திருவுள்ளங்கொண்ட எம் பெருமான், குழந்தைக்கு அஜீர்ணத்தைப்போக்கிப் பசியை விளைத்துச் சோறிடும் தாயைப்போலே, இவர்க்குப் பரம பத$_3$ம் செல்வதில் ஆசையை உண்டாக்கி அங்கேகொண்டு போவதற்காக, "மாற்றமுள" என்னும் கடைசித் திரு மொழியிலே ஸம்ஸாரத்தின் கொடுமையைக் காட்டினுன். அதின் கொடுமையை அநுஸந்தி$_4$த்து, ஆற்றுமையாலே,*

---

விபூ$_4$தித்$_2$வயத்தையும் மறந்து, த்ருதீய விபூ$_4$தியான தி$_3$வ்ய தே$_3$ஶங்களை அநுப$_4$விக்கிற இவர்க்கு ஈஶ்வரன் ஸம்ஸாரத்தில் கொடுமையைக் காட்டுவானென்னென்னில், "இவ்வநுப$_4$வம் அவிச்சி$_2$ந்நமாகவேணும்" என்று நினைத்து, அது அங்கே யொழியக்கூடாமையாலே, ஆமத்தையறுத்துப் பசியை விளைப்பித்துச் சோறிடுவாரைப்போலே விடாயைப் பிறப்பித்து அங்கே கொடுபோகைக்காகக் காட்டினனென்று ஶங்காபரிஹாரங் கள் கண்டுகொள்வது.

பெரி-வ்யா:—(ஒருபேரித்யாதி3) ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்த வஸ்துக்களுக்கும் அத்3விதீயகாரணமாய், அதுக்குத்தக்க பரப்பையுடைய திருநாபி4யிலே. அப்பரப்படங்கலும் கண் செறியிட்டாற்போலே பெருத்திருக்கிற மலராகிற ஆஸநத்திலே, ஒருகால் இதரவிஸஜாதீய ஜன்மாவான சதுர்முக2னை யுண்டாக்கினாய். ஒருகாலென்றாலும் ப்ரவாஹரூபேண நித்யமா யிருக்குமிறே. "नावेक्षसे" (நாவேக்ஷஸே).

ஆழ்வார்க்கு முதலிலே செப்பேட்டைக் கையிலே கொடுத்து நிதி4யைக்காட்டிக் கொடுப்பாரைப்போலே திருமந்த்ரத்தையும் அதிலர்த்த2த்துக்கெல்லை நிலமாகக் கோயில்களையும் காட்டிக் கொடுக்கக்கண்டு க்ருதக்ருத்யராய் ஸம்ஸாரத்தையும் பரமபத3த்தையும் ஒக்க மறந்தார்; ஆழ்வாரைப் பார்த்து எம்பெருமான் "நீரிருக்கிறது ஸம்ஸாரத்திலே கிடீர்" என்றருளிச்செய்ய, அதின் கொடுமையை அநுஸந்தி4த்து ஆற்றாமையாலே மநோவாக்காயங்களாலே எம்பெருமானை அநுப4வித்து ஆற்றப்பார்த்தார்; அது பண்டையிலும் இரட்டியாய், மிகவுமாற்றாமையாலே எம்பெருமானுடைய ஶரண்யத்வத்தைப் பேசிக்கொண்டு, அதுக்கெல்லைநிலமான திருக்குடந்தையில் ஆராவமுதாழ்வார்

---

தமது மநோவாக்காயங்களாலே எம்பெருமானை அநுப4வித்து ஆறுதலடையப் பார்த்தார் திருக்குறுந்தாண்டகத்திலே. மநோவாக்காயங்களாலே இவனை அநுப4விக்க அநுப4விக்க ஆசை மேன்மேலும் பெருகி மிகவும் ஆற்றாமை விளைகையாலே, எம்பெருமான் அனைவராலும் ஶரணமடையத் தக்கவன் என்பதைப் பேசிக்கொண்டு, ஶரணமடைவார்க்கெல்லாம் புகலிடமாகையாலே நம்மாழ்வாராலும் ஶரணமடையப்பெற்ற திருக்குடந்தையெம்பெருமானை ஆராவமுதாழ்வார் திருவடிகளையே எல்லாப்போதிலும் தமது இஷ்டப்ராப்திக்கும், அநிஷ்டம் நீங்குகைக்கும் உபாயமாகப் பற்றி முடிக்கிறார் இத்திருவெழுகூற்றிருக்கையிலே.

தி3வ்யப்ரப3ந்த4ஸாரம் அவதாரிகை முற்றிற்று.

## திருமங்கையாழ்வார் அருளிய
# திருவெழுகூற்றிருக்கை

**ஒருபேருந்தி யிருமலர்த் தவிசில்**
**ஒருமுறை யயனை யீன்றனை**

ஒரு—ஒப்பற்றதாய். பேர்—பரப்புடையதான. உந்தி—திருநாபியிலுண்டான. இரு—பெரிதான. மலர்—(தாமரைப்) பூவாகிற. தவிசில்—ஆஸனத்தின்மீது. ஒரு முறை—ஒருகால் (ஸ்ருஷ்டிகாலத்தில்), அயனை—பிரமனை. ஈன்றனை—படைத்தருளினாய்.

---

திருவடிகளையே எத்த3ஶைக்கும் இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்டநிவாரணத்துக்கும் உபாயமாகப் பற்றிமுடிக்கிறார்.

---

தி3வ்ய-வ்யா:— (ஒரு பேருந்தி இருமலர்த் தவிசில் ஒரு முறை அயனை ஈன்றனை) தன்னைத் தவிர்ந்த எல்லாப்பொருள்களுக்கும் ஒப்பற்ற காரணமாய், அப்படிக் காரணமாகைக்குத் தகுந்த பெருமையை (பரப்பை) உடையதான திருநாபி4யிலே, அதன் பரப்பு அனைத்தையும் அடைத்துக்கொண்டிருப்பதுபோலே பெருத்திருக்கிற தாமரைமலராகிற ஆஸநத்திலே, முன்னொருகால் (ஸ்ருஷ்டிகாலத்தில்) "ந ஜாயதே இதி அஜ:" [(மற்றவர்களைப்போல் ஸ்த்ரீபுருஷ ஸம்யோக3த்தாலே) பிறக்காதவனாகையாலே அஜன் எனப்படுகிறான் பிரமன்] என்கிற வ்யுத்பத்தியின்படியே பிறப்புடைய மற்றவர்களைக் காட்டிலும் மிகவும் வேறுபட்ட பிறப்புடையவனாகையாலே அயன் (அஜன்) என்று பெயர்பெற்ற நான்முகனை உண்டாக்கினாய். 'ஒருமுறை' என்று ஸ்ருஷ்டிகாலத்தைச் சொன்னது ஒவ்வொரு ப்ரளயத்திற்குப் பின்பும் ஏற்படும் ஸ்ருஷ்டிகாலத்தைக் குறிக்குமாகையாலே, இந்த ப்3ரஹ்மஸ்ருஷ்டி ப்ரவாஹரூபேண நித்யமாயிருக்கும் என்கை. இப்படி ப்3ரஹ்ம ஸ்ருஷ்டியை இங்கு சொன்னது, உலகனைத்தின் ஸ்ருஷ்டிக்கும் உபலக்ஷணமாய் "நாவேக்ஷஸே யதி3 ததோ பு4வநாந்யமூநி நாலம் ப்ரபோ4 ப4விதுமேவ குத: ப்ரவ்ருத்தி:" [ஸ்தோ-ர 10] [எம்பிரானே! நீ கடாக்ஷியாவிடில் ஸ்ருஷ்டிகாலத்தில் இவ்வுலகங்கள் உண்டாகவே

(ஒரு பேருந்தியித்யாதி3) ஜக3த்து ப்ரளயங்கொண்ட காலத்து உன்னுடைய நிர்ஹேதுக க்ருபையாலே இவற்றினுடைய ஸத்தையை உண்டாக்கினவனே! (ஒருபேருந்தி) ப்ரதா4நமாய் ஆத்3யமாயிருந்த திருநாபி4யிலே. (இருமலர்த் தவிசில்) பெரிய தாமரைப்பூவின் அல்லியிலே. (ஒருமுறை அயனை ஈன்றனை) ஒருகால் ஜக3த்ஸ்ருஷ்டிக்கடியாக ப்3ரஹ்மாவை உண்டாக்கினாய். இவற்றினுடைய ஸத்தாதி3களை முதலிலேயுண்டாக்கின உனக்கே பா4ரமன்றோ எல்லா ரக்ஷையுமென்கிறார். நீயுண்டாக்கின இதுக்கு ஒரு கு3ணம் பிறப்பிக்க அரிதோ?

---

மாட்டா. உன்னையொழிய இவை எப்படிச் செயல்புரிய முடியும்?] என்கிற ரீதியிலே இவற்றின் ஸத்தையே உன்னதீ4னமானபின்பு இவற்றின் கார்யத்தை நீயேயன்றோ செய்யவேண்டும் என்று உணர்த்துவதற்காக.

(ஒரு பேருந்தி....) உலகை ப்ரளயங்கொண்ட காலத்தில் உன்னுடைய நிர்ஹேதுக க்ருபையாலே இவற்றினுடைய ஸத்தையை உண்டாக்கினவனே! (ஒரு பேர் உந்தி) 'ஒரு' என்று எல்லாவுலகிற்கும் உத்பத்தி ஸ்தா2னமாயிருக்கும் நாபி4யினுடைய ப்ராதா4ந்யத்தைக் காட்டுகிறது. "பேர்" என்று பழையதாயிருக்கும் பெருமையைக் காட்டுகிறது. (இரு மலர்த் தவிசில்) பெரியதான தாமரைப்பூவின் இதழிலே. (ஒருமுறை அயனை ஈன்றனை) முன்னொரு காலத்தில் லோகஸ்ருஷ்டிக்கு உறுப்பாகப் பிரமனைப் படைத்தாய். இவற்றினுடைய ஸத்தை முதலானவற்றை முதலிலே உண்டாக்கின உனக்கே பொறுப்பன்றோ இவற்றை எல்லாப்படியாலும் ரக்ஷிப்பதும் என்கிறார். நீ உண்டாக்கின இதற்கு ஒரு பெருமையை அளிப்பது உனக்கு அரிதோ?

---

(ஒருபேருந்தி) இத்யாதி3—(ஒருபேருந்தி) முந்தினதுமாய் அதுதான் பழையதுமாயிருக்கை. (தவிசில்) அல்லியாய், இதழைச் சொல்லுகிறது.



*வ்யா:*—(ஒருபேரித்யாதி3) நாம ரூப விபா4கா3நர்ஹமாய், தன்னோடு அவிப4க்தமாயிருக்கிற இத்தை விப4க்தமாக்கி, தமஶ்ஶப்3தத்துக்கு வாச்யமாக்கி, அநந்தரம் ஸூக்ஷ்மரூபேண "அக்ஷரம், அவ்யக்தம்" என்கிற அவஸ்தை2களைப் பிறப்பித்து, பின்னை மஹானாக்கி, அஹங்காரமாக்கி, தந்மாத்ரைகளாக்கி, பூ4தங்களாக்கி, பௌ4திகமான வர்ண( அண்ட? )ஸ்ருஷ்டியளவும் வரப்பண்ணி, பின்னை அவ்வருகுண்டான தே3வாதி3கார்யங்களையடங்கலும் அவன் முக2த்தாலே பண்ணுவதாக முதலில் சதுர்முக2னை உண்டாக்கினானாயிற்று. முன்புள்ளவை யெல்லாம் தானே கைதொட்டுச் செய்து, பின்பு சதுர்முக2னை அதி4ஷ்டி2த்து நின்று செய்வானாகப் பார்த்

---

இங்கு ப்3ரஹ்மஸ்ருஷ்டியைக் கூறுவதன்மூலம் அதற்கு முன்புள்ள ஸ்ருஷ்டிகள் அனைத்தும் உபலக்ஷிக்கப்படுகின்றன. அதாவது— பெயர், உருவம் ஆகியவற்றாலே பிரித்துக்காணவொண்ணாதபடி எம்பெருமானோடே ஒன்றியிருக்கையால் 'அவிப4க்த தமஸ்' எனப்படும் மூலப்ரக்ருதியைப் பிரித்துக் காணத்தக்கதாய், விப4க்ததமஸ் என்னும் பெயரையுடையதான ஸ்தூ2லதத்துவமாக்கி, அதற்குப்பின் அதைக்காட்டிலும் சிறிதுசிறிதாக ஸ்தூ2லநிலைகளான அக்ஷரம், அவ்யக்தம் என்னும் நிலைகளை அதற்கு உண்டாக்கி, அதற்குப்பின் மேன்மேல் ஸ்தூ2லநிலைகளான மஹான், அஹங்காரம் என்னும் தத்துவங்களைப் பிறப்பித்து, அவ்வஹங்காரத்திலிருந்து ஶப்3த3ஸ்பர்ஶரூபரஸக3ந்த4தந்மாத்ரைகளையும், ஐம்பெரும்பூ4தங்களையும் உண்டாக்கி, அந்த பூ4தங்களாலான அண்ட3த்தை ஸ்ருஷ்டித்து, தே3வர், மனிதர், திர்யக், ஸ்தா2வரம் என்னும் நாலுவகையான ஶரீரங்களை உடையவர்களான சேதனரை இவன் மூலமாகப் படைப்பதற்காக, முதலில் இந்நான்முகனை உண்டாக்கினானாயிற்று. அண்ட3த்தைப் படைப்பது வரையிலுள்ள ஸமஷ்டிஸ்ருஷ்டியைத் தானே தன் ஸங்கல்பத்தாலே செய்து, மேலுள்ள வ்யஷ்டிஸ்ருஷ்டியை இவனுக்கு அந்தர்யாமியாய் நின்று,

**ஒரு முறை இருசுடர் மீதினி லியங்கா**
**மும்மதிளிலங்கை இருகால் வளைய**
**ஒரு சிலை யொன்றிய வீரெயிற்றழல்வாய்**
**வாளியின் அட்டனை;**

ஒரு முறை—ஒரு தரங்கூட, இரு சுடர்—சந்திர ஸூர்யர்கள். (ப$_4$யத்தினால்) மீதினில் இயங்கா—மேலே ஸஞ்சரிக்க வொண்ணாததும். மும் மதிள்—நீர் அரண், மலை அரண், காட்டரண் என்கிற மூன்று அரண்களையுடையதுமான. இலங்கை—லங்காபுரியை இரு கால் வளைய—இரண்டு நுனியும் வளைந்த. ஒரு சிலை—ஒப்பற்ற சார்ங்க வில்லில். ஒன்றிய

---

தான்;முன்புsஅசித்தைக்கொண்டு கார்யங்கொண்டத்தோடு இவனைக் கொண்டு கார்யங்கொள்ளப் பார்த்தத்தோடு வாசியற்றிருக்கிறதாயிற்று இவனுக்கு. பாரதந்த்ர்யத்தில் வந்தால் இவனுக்கும் அசித்ஸாம்யமுண்டு, சேதநரான வாசியால் பெறுகிற ஏற்றம்—"கார்யத்துக்குக்கடவான் அவனே" என்று அறுதியிட்டிருக்கையாயிற்று,

---

செய்வதற்காக இவனைப் படைத்தான். ஸமஷ்டிஸ்ருஷ்டியில் ப்ரக்ருதியைக்கொண்டு மஹானையும், மஹானைக்கொண்டு அஹங்காரத்தையும், அஹங்காரத்தைக்கொண்டு தன்மாத்ரை முதலானவற்றையும் படைத்ததற்கும், இப்பிரமனைக்கொண்டு அண்ட$_3$த்திற்குள்ளிருக்கும் அசேதனப் பொருள்களையும், தேவர் முதலானோரையும் படைத்ததற்கும் ஒரு வாசியுமில்லை ஸர்வேஶ்வரனுக்கு. பாரதந்த்ர்யத்தைப் பார்க்கும்போது அவ்வசேதனப் பொருளுக்கும், சேதனனான இப்பிரமனுக்கும் பரிபூர்ணஸாம்யமுண்டு. பிரமன் முதலான அறிவுடைய சேதனர்க்கு அறிவற்றவற்றைக் காட்டிலும் உள்ள ஒரே ஏற்றம் "இவற்றை நமக்கு அந்தர்யாமியாயிருந்து நடத்துகிறவன் ஸர்வேஶ்வரனே" என்று அறுதியிட்டிருக்கையேயாகும்.

---

s (பா) அவற்றைக்கொண்டு



ஈர் எயிறு—பொருந்தியதும் இரண்டு பற்களையுடையதும், அழல் வாய்—நெருப்பைக் கக்குகின்ற வாயையுடையதுமான வாளியின்—அம்பினால், அட்டனை—சுட்டொழித்தாய்.

---

(ஒருமுறையித்யாதி$_3$) தானுண்டாக்கின பயிருக்குக் களைபறிப்பானும் தானேயானாற்போலே, ஸ்ருஷ்டமான ஜக$_3$த்தை அழிவுசெய்யும் ராக்ஷஸரை நிரஸிப்பானும் தானே. (ஒருமுறை) ஒரு பர்யாயம். (இருசுடர்) சந்த்$_3$ராதி$_3$த்யர்கள். (மீதினியியங்கா) மேலே ஸஞ்சரிக்க ப$_4$யப்படும்படியாய். (மும்மதிள்) கி$_3$ரிது$_3$ர்க்க$_3$ ஜலது$_3$ர்க்க$_3$ வநது$_3$ர்க்க$_3$

---

(ஒருமுறையித்யாதி) பிரிவுக்கு ஹேதுபூ$_4$தனான ராவணனை அழியச்செய்தாள் பிராட்டியோ? நீயன்றோ? ஒருகால் சந்த்$_3$ர ஸூர்யர்களுங்கூட மேலே ஸஞ்சரிக்கவும் அஞ்சும்படியாய், காட்ட

---

இனி அடுத்தபடியாக, தான் விளைத்த பயிருக்கு உழவன் தானே களைபறிப்பவனுமாவது போலே, படைக்கப்பட்ட உலகினை அழிக்கும் ராக்ஷஸரை அழிப்பவனும் இவனே என்கிறார்.— (இருசுடர் ஒரு முறை மீதினில் இயங்கா) சந்திரஸூர்யர்கள் ஒரு தரங்கூட (இவ்விலங்கையின்) மேலே ஸஞ்சரிக்க ப$_4$யப்படும்படியிருப்பதாய். "பீ$_4$ஷோதே$_3$தி ஸூர்ய:" [பரமாத்மாவிடம் ப$_4$யத்தால் ஸூர்யன் உதி$_3$க்கிறான்.] என்று பரமாத்மாவிடம் ப$_4$யத்தால் தப்பாமல் உதி$_3$த்து ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் ஸூர்யனும், "நைநம் ஸூர்ய: ப்ரதபதி" [ரா-யு$_3$-15-10] [ராவணனை ஸூர்யன் (தன் கிரணங்களால்) கொளுத்துவதில்லை] என்கிறபடியே ராவணனிடம் ப$_4$யத்தால், இலங்கையின் மேல் ஸஞ்சரித்துத் தன் கிரணங்களால் கொளுத்துவதில்லை என்று கூறப்படுகிறதன்றோ. ஸூர்யனுக்குச் சொன்ன நியாயம் சந்திரனுக்கும் ஒக்குமாகையாலே, சந்திர ஸூர்யர்கள் ராவணனிடம் ப$_4$யத்தால் ஒருமுறைகூட இலங்கையின் மீது ஸஞ்சரியாமலிருந்தனர் என்கிறார். (மும்மதிள் இலங்கை) மலையரண், நீரரண், காட்டரண் என்கிற மூவகைப்

மென்கிற மூன்றையுமுடைத்தான. (இலங்கை) நினைத்தார்க்கு அஞ்சவேண்டும்படியான ராக்ஷஸர். குளவிக்கூடு சேர்ந்தாற்போலே சேர்ந்து அம்மணக்கூத்தடிக்கும் தே$_3$ஶம். (இருகால்வளைய ஒரு சிலையொன்றிய ஈரெயிற்றழல் வாய் வாளியிலட்டனை) இரண்டு கோடியும் வளைந்துநிற்கும் ப்ரத$_4$ாநமான ஸ்ரீஶார்ங்க$_3$த்திலே பொருந்தி, இரண்டெயிற்றையுமுடைத்தாய், நெருப்பையுமிழாநின்றுள்ள ஶரத்தாலே சுட்டுப்பொகட்டாய். (வாளியிலட்டனை) ப்$_3$ரஹ்ம ஸ்ருஷ்டியைப்போலன்றியே, பத்தும்பத்தாக அம்பா

---

ரண், மலையரண், நீரரண் என்கிற மூன்று வகைப்பட்ட அரணையுடைத்தாயிருக்கிற லங்கையை வில்லினுடைய கோடித்$_3$வயமும் வளையும்படி அத்$_3$விதீயமான ஸ்ரீஶார்ங்க$_3$த்திலே பூட்டப்பட்டு, இரண்டெயிற்றையுமுடைத்தாய்த் தொடுக்கும்போது அம்பாய் எதிரிகள் மேலே தைக்கும்போது நெருப்பாய்த் தைக்கும் அம்பாலே முடித்தாய்.

---

பட்ட அரணையும் உடையதான இலங்கையை. (இலங்கை) நினைத்தவர்களெல்லாம் அஞ்சவேண்டும்படியான கொடுமையை உடைய அரக்கர். குளவிகள் கூடுகட்டிக்கொண்டு கூடியிருப்பதுபோலே சேர்ந்திருந்து அம்மணக்கூத்தடிக்கும் தே$_3$ஶத்தையன்றோ அழித்தது. எப்படி அழித்தான்? எனில்: (இருகால் வளைய ஒருசிலை ஒன்றிய ஈரெயிற்று அழல் வாய் வாளியின் அட்டனை) இரு நுனியும் வளைந்து நிற்கும் ஒப்பற்ற சார்ங்கமென்னும் வில்லிலே பொருந்தியதாய், இரண்டு பற்களை உடையதாய், நெருப்பை உமிழ்கின்ற அம்பாலே சுட்டொழித்தாய். (அழல் வாய் வாளி) தொடுக்கும் போது அம்பாகத் தோன்றும், எதிரியின் மேலே விழும்போது நெருப்பாகப்பாயும். (வாளியின் அட்டனை) 'அயனை ஈன்றனை' என்றவிடத்தில் சொல்லப்பட்ட ப்$_3$ரஹ்ம ஸ்ருஷ்டியைப்போலே ஸங்கல்பத்தால் செய்யாமல், போர்க்களத்தில் நேருக்கு நேரே நின்று அம்பால் எதிர்த்து

---

'' ஈரெயிறு ''—பிறைவாயம்பு.



வெகிர்த்துப் பிராட்டியினுடைய ஸம்ஶ்லேஷ விரோதி$_4$யைப் போக்கினாற்போலே என்னுடைய விரோதி$_4$களையும் போக்கவேணுமென்று கருத்து.

---

[அடைந்தவித்யாதி$_3$] இவ்வாத்மாவுக்கு ஸ்வதஸ்ஸித்$_3$த$_4$மல்ல; அயபிண்ட$_3$த்தையும் அக்$_3$நியையும் சேர்த்துவைத்தால் அந்யோந்ய ஸம்யோக$_3$த்தாலே அதினுடைய பரமாணுக்கள் ஸூக்ஷ்மரூபேண அபி(ய?)த்திலே வந்து ஸங்க்ரமிக்கையினாலேயாதல், அன்றிக்கே அதினுடைய கு$_3$ணத்தை ப$_4$ஜிக்கையினாலேயாதல், அதினுடைய ஔஜ்வல்யத்தையும் வர்ணத்தையு முடைத்தாயிருக்குமாபோலே,

---

ராவணனைச் சித்ரவதை$_4$ செய்தான் என்று கருத்து. (ஒரு முறை....அட்டனை) தன்னைப் பிரித்த பாவியான ராவணனை அழியச் செய்தவள் பிராட்டியல்லவே; நீயன்றோ! அதுபோலவே என்னை உன்னிடமிருந்து பிரிக்கும் இந்த ஸம்ஸாரத்தையும், அதற்கு மூலமான அவித்$_3$யா கர்ம வாஸநா ருசிகளையும் நான் போக்கிக்கொள்ள இயலாது; நீயே போக்கித்தரவேணும் என்று கருத்து. இவ்விடத்திற்கு ஸம்வாத$_3$மாக

''அடைந்த அருவினையோ டல்லல் நோய் பாவம்
மிடைந்தவை மீண்டொழிய வேண்டில்—நுடங்கிடையை
முன்னிலங்கை வைத்தான் முரணழிய முன்னொருநாள்
தன்வில் அங்கை வைத்தான் சரண்'' [முதல் திருவ 59]

என்னும் பாசுரம் அநுஸந்தி$_4$க்கத்தக்கது. (அடைந்த அருவினை....) அருவினை முதலானவை இவ்வாத்மாவுக்கு இயல்பானவையல்ல; இரும்புருண்டையை நெருப்பிலேயிட்டுக் காய்ச்சினால், இரண்டும் ஒன்றோடொன்று சேர்ந்திருக்கையாலே அக்$_3$னியின் பரமாணுக்கள் இரும்போடு சேருகையாலேயோ, அல்லது அக்$_3$னியின் கு$_3$ணத்தை இரும்பு அடைகையினாலேயோ இரும்புருண்டை அக்$_3$னியின் ஒளியையும் நிறத்தையும் உடையதாவதுபோல், நித்யமான

நித்யமான ஆத்மவஸ்து அநாதி$_3$யாயுள்ள அசித்ஸம்யோக$_3$த்தாலே அந்த அசித்திலே அஹமபி$_4$மாநத்தைப் பண்ணும்படி ப$_3$லிக்கிற அவித்$_3$யா கர்ம வாஸநா ருசிகள், அவையடியாகப் பரிக்$_3$ரஹித்த ஶரீரத்தைப்பற்றி வரக்கடவதான ஆதி$_4$வ்யாதி$_4$, நிஷித்$_3$த$_4$ாநுஷ்ட்டாநம், இப்படி கார்யமாயும்அடிகாணவொண்ணாதபடி(யும்?)கிடக்கிறவை, புதுப்புடைவையை அழுக்குக் கழற்றுமாபோலே க்ரமத்தாலே போகையன்றிக்கே ஒருகாலே ஸவாஸநமாகப் போக்க வேண்டில் [ நுடங்கிடையை இத்யாதி$_3$ ] அதுக்குச் செய்ய வேண்டுவதென்னென்ன, ப்ரப$_3$ல ப்ரதிப$_3$ந்த$_4$கங்களை வருத்தமறப் போக்க வல்லவனைப் பற்றவடுக்கும். [ நுடங்கிடையை ] கண்

ஆத்மஸ்வரூபம்—அநாதி$_3$யாயுள்ள அசித்ஸம்யோக$_3$த்தாலே. அவ்வசித்தாகிற ஶரீரத்தையே தானாக நினைக்கச்செய்கின்ற அவித்$_3$யையாகிற அஜ்ஞானமும். இதற்குக் காரணமான கர்மம், வாஸனை, ருசி ஆகியவையுமான இவையே அருவினை ( அழிக்க அரிதான வினை ) எனப்படுகின்றன. ( அல்லல் நோய் ) முற்கூறிய அருவினைகளால் ஏற்படும் ஶரீரஸம்ப$_3$ந்த$_4$த்தால் 'அல்லல்' [ஆதி$_4$] எனப்படும் மனத்துன்பமும், 'நோய்' [வ்யாதி$_4$] எனப்படும் ஶரீரத் துன்பங்களும் ஏற்படுகின்றன. (பாவம்) இந்த ஶரீரங்கொண்டு செய்கிற புண்யபாபங்களாகிற பாபம். முன் ஶரீரங்களால் செய்யப்பட்ட கர்மங்கள் 'அருவினை' என்று சொல்லப்பட்டு விட்டபடியால். இந்த ஶரீரத்தினால் செய்யப்படும் கர்மங்களை இங்கு 'பாவம்' என்னும் ஶப்$_3$த$_3$த்தால் குறிக்கப்படுகின்றன. ( மிடைந்தவை ) இவ்வண்ணமாக ஒன்றுக்கொன்று கார்யமாக அநாதி$_3$காலமாகத் தொடர்ந்து வருகையாலே தொடக்கம் காணவொண்ணாதபடி நெருங்கியிருக்கும் இவை. (மீண்டு ஒழியவேண்டில்) புது வஸ்த்ரத்தை வெளுக்கச் செய்வதுபோலே படிப்படியாகச் செய்யாமல். பழைய வஸ்த்ரத்தை அழுக்குப்போக வெளுப்பதுபோலே ஓரே தடவையில் வாஸனையோடே இவையனைத்தும் போக வேண்டும் என்று நினைத்தால். இதற்குச் செய்யவேண்டுவது என்னென்னில்,— வலிய தடைகளை எளிதில் போக்க



டார்க்கு ''என்னாய் விளையக் கடவதோ ?'' என்று அஞ்சவேண்டும்படியான ஸௌகுமார்யத்தையுடைத்தான இடையையுடைய வளைக்கிடேர் பிரித்துவைத்தது என்கை. முன்பு லங்கையிலே கொடுபுக்குச் சிறைவைத்த ராவணன் மிடுக்கு அழியும்படியாக, மேக$_4$த்திலே மின்னினாற்போலே அழகிய திருக்கையிலே ஸ்ரீஶார்ங்கத்தை வைத்தவன். எதிரிகளை அழியச்செய்கைக்கு ஒரு வ்யாபாரம் பண்ணவேண்டா, கையிலே வில்லை வாங்க அமையும். அழகிய திருக்கையிலே வில்லைப்பிடித்தவன் உபாயமென்னுதல்; ''அவனை உபாயமாகப் பற்றுங்கோள்'' என்று விதி$_4$யாதல்; ''நுடங்கிடையை முன்னிலங்கை வைத்தான்'' என்றதுக்குக் கருத்தென்னென்னில்; ஈஶ்வர ஶேஷமான ஆத்மவஸ்துவை என்னதென்றிருக்கையாவது—

வல்லவனைப் பற்றவேண்டும் என்கிறார் மேலே — (நுடங்கிடையை) என்று தொடங்கி. (நுடங்கிடையை) துவளா நின்ற இடையை உடைய ஸீதாபிராட்டியை. பார்த்தவர்களெல்லாம். 'பெருமாளைப் பிரிந்து இப்படித் துவளும் இப்பிராட்டிக்கு என்ன ஆகப்போகிறதோ' என்று அஞ்சவேண்டும்படியான மெல்லிய இடையை உடைய இவளையன்றோ இப்பாவி பிரித்தான் என்கை. ( முன் இலங்கை வைத்தான் முரண் அழிய ) முன்னொரு நாளிலே இலங்கையிலே கொண்டுபோய்ச் சிறைவைத்த ராவணனுடைய வலிமை அழியும்படியாக. (முன் ஒருநாள் தன் வில் அங்கை வைத்தான் சரண்) மேக$_4$த்திலே இந்த்$_3$ரத$_4$நுஸ் ஏற்பட்டாற்போலே அழகிய திருக்கையிலே வில்லை வைத்த இவனே [மிடைந்தவை மீண்டொழிய] உபாயமாவான். ( முரண் அழிய வில் அங்கை வைத்தான் ) எதிரிகளை அழியச் செய்ய வில்லை எடுத்து நாணேற்றி அம்பெய்யவும் வேண்டா; விற்பிடித்த பிடியிலே எதிரிகள் மண்ணுண்ணும்படியிருப்பவன் என்று கருத்து. ( சரண் ) வில்லை அழகிய கையிலே பிடித்தவன் உபாயம் என்றும் கொள்ளலாம்; அவனை உபாயமாகப் பற்றுங்கள் என்று பிறர்க்கு விதி$_4$ப்பதாகவும் கொள்ளலாம். ''நுடங்கிடையை முன்னிலங்கை வைத்தான்'' என்றதற்குக் கருத்து

பிராட்டியைப் பிரித்த ராவணனோடொக்குமென்கை. தன்னைப் பற்றினார்க்கு. அவள் விரோதி$_4$யைப் போக்கினாற்போலே விரோதி$_4$யைப் போக்கிக் கொடுக்குமென்கை. அவளோடொத்த ப்ராப்தியும் அவன்பக்கல் இவனுக்குண்டென்கையும். அவனைப் பற்றுவார் அவள்முன்னாகப் பற்றுவதென்கையும்.

(ஒருபேருந்தி இத்யாதி$_3$) இல்லாதத்தை உண்டாக்கின உனக்கு உள்ளதுக்கு ஒரு கு$_3$ணாத$_4$ாநம் பண்ணுகையரிதோ வென்கையும், பிராட்டியோட்டைக் கலவிக்கு விரோதி$_4$யான ராவணனை அழியச்செய்த உனக்கு என்னுடைய ப்ரதிப$_3$ந்த$_4$கம் போக்குகை அரிதோவென்கையும். (வாளியிலட்டனை) ப்$_3$ரஹ்ம ஸ்ருஷ்டிபோலே ஸங்கல்பத்தாலே செய்கையன்றிக்கே நேர்கொடு நேரே பூசலிலே நின்று அழியச்செய்தாய்.

---

என்னவெனில்; ஈஶ்வரனுக்கு அடிமைப்பட்ட ஆத்ம வஸ்துவை நாம் அநாதி$_3$காலமாக நம்முடையதாக நினைத்திருப்பது பிராட்டியைப் பிரித்த ராவணனுடைய செயலோடு ஒக்கும் என்று உணர்த்துகை. தன்னை உபாயமாகப் பற்றினார்க்கு. பிராட்டியின் விரோதி$_4$யான ராவணனைப் போக்கினாற்போலே தடைகளையெல்லாம் போக்கித் தன்னைக்கொடுப்பான் என்றும் கருத்து. பிராட்டியோடு ஒக்க உறவு இச்சேதனனுக்கு ஸர்வேஶ்வரனோடு உண்டென்று உணர்த்தவும். உபாயமாக அவனைப் பற்றும்போது புருஷகாரமான இவளை முன்னிட்டுப் பற்றவேணும் என்று உணர்த்தவும் 'நுடங்கிடையை' என்று தொடங்கி அவளைப் பேசுகிறார் என்றும் கொள்ளலாம்.

(ஒரு பேருந்தி) என்று தொடங்கி. 'இல்லை' என்னலாம்படி இருந்த பொருளை உண்டாக்கின உனக்கு, உள்ள பொருளான எனக்கு ஒரு பெருமையைத் தருகை அரிதல்ல என்று காட்டினார். (ஒருமுறை) என்று தொடங்கி. பிராட்டியோடு ஸம்ஶ்லேஷிப்பதற்குத் தடையாயிருந்த ராவணனை அழித்த உனக்கு, என்னுடைய தடைகளைப் போக்குகை அரிதல்ல என்று காட்டுகிறார்.



**மூவடி நானிலம் வேண்டி**
**முப்புரி நூலொடு மானுரி யிலங்கு மார்வினின்**
**இருபிறப் பொருமாணாகி**
**ஒரு முறை யீரடி மூவுலகளந்தனை**

ஒரு முறை—ஒருகாலத்தில். முப்புரி நூலொடு—பூணூலோடு கூட. மான் உரி—மான் தோலும், இலங்கு—விளங்காநின்ற, மார்வினின்—திருமார்பை உடைய, இரு பிறப்பு ஒரு மாண் ஆகி—ஒப்பற்ற ப்$_3$ராஹ்மண ப்$_3$ரஹ்மசாரியாகி. (மாவலியிடம் சென்று) நானிலம்—பூமியிலே, மூ அடி—மூன்றடி நிலத்தை, வேண்டி—யாசித்து. ஈர் அடி—இரண்டு திருவடிகளாலே. மூ உலகு—மூன்று லோகங்களையும். அளந்தனை—அளந்துகொண்டாய்.

---

(மூவடியித்யாதி$_3$) அம்பாலே ஸாதி$_4$க்கவொண்ணாத விடம் அழகாலே ஸாதி$_4$த்தபடி சொல்லுகிறது. (மூவடி நால்நிலம் வேண்டி) நாலுவகைப்பட்ட பூ$_4$மியிலே மூவடியை

---

(மூவடியித்யாதி$_3$) அம்பாலழிக்க வொண்ணாத இடத்தை அழகாலும் இரப்பாலும் அழியச்செய்தபடி. ப்ரயோஜநாந்தரபரரான இந்த்$_3$ராதி$_3$களுடைய கார்யஞ்செய்த நீ உன்னையே ப்ரயோஜநமாக நினைத்திருக்கிற என் கார்யஞ் செய்யலாகாதோ ? (மூவடி நால்நிலம் வேண்டி) ஈரடியாலே பூ$_4$மியையளந்து ஓரடிக்கு

---

இனி, ராவண ஸம்ஹாரத்தைப்போலே அம்பாலே செய்யமுடியாதபோது. அழகாலும், ஶீலகு$_3$ணத்தாலும் அடியார் கார்யம் செய்வான் என்று காட்டுகிறார்.—(மூவடி....) மற்ற பயன்களை விரும்பும் இந்திரன் முதலானோர் காரியம் செய்த நீ, உன்னையே பயனாக நினைத்திருக்கும் என் கார்யம் செய்யலாகாதோ? (நால்நிலம் மூவடி வேண்டி)

---

(நானிலம்) கி$_3$ரி, வநம், த்$_3$வீபம், ஸமுத்$_3$ரம். ஆக நாலு வகைப்பட்ட பூ$_4$மி.

வேண்டி. (முப்புரி நூலொடு மானுரியிலங்கு மார்வினில்) ஒருகாளமேக$_4$த்திலே மின்னலை ஏறிட்டாற்போலே திரு யஜ்ஞோபவீதமும், அத்தோடேகூடின க்ருஷ்ணாஜிநமும் விளங்காநின்ற திருமார்பையுடையையாய். (இருபிறப்பு)

---

அவனைச் சிறையிட்டு வைக்க நினைத்து மூன்றடியை இரந்தானாயிற்று. "நெய்தல், மருதம், முல்லை, குறிஞ்சி" என்றாற்போலே சொல்லுகிற அன்னலும் துன்னலுமான பூ$_4$மியை அர்த்தி$_2$த்து; இந்நாலிலும் ருஜீஷாம்ஸமாய்க் கழித்தது பாலைநிலமென்று சொல்லுவர்கள். இவர்க்கபி$_4$மதமும் நாலென்னுமிடம் தோற்றியிருந்ததிறே. (முப்புரியித்யாதி$_3$) மேக$_4$த்திலே மின்னின்றாற்போலே சாத்தின யஜ்ஞோபவீதமும் க்ருஷ்ணாஜிநமும் விளங்காநின்றுள்ள திருமார்வை உடையையாய், உபநயநம் பண்ணின புதுமை

---

"முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல்" என்று சொல்லப்படும் நாலுவகைப்பட்ட அன்னலும் துன்னலுமான (அஸாரமும், அல்பஸாரமுமான) நிலத்தில், இரண்டு அடியாலே உலகங்களை அளந்து, மூன்றாவது அடியாலே அவனைச் சிறையிட்டு வைக்க நினைத்து, மூன்று அடியை யாசித்தானாயிற்று. காடும் அதைச்சார்ந்த இடமும் முல்லை; மலையும் அதைச் சார்ந்த இடமும் குறிஞ்சி; நாடும் அதைச்சார்ந்த இடமும் மருதம்; கடலும் அதைச்சார்ந்த இடமும் நெய்தல். "நானிலம் வாய்க் கொண்டு நன்னீர் அறமென்று கோது கொண்ட வேனில் அஞ்செல்வன் சுவைத்து உமிழ் பாலை" [திருவிருத்தம் 26] என்கிறபடியே நால்வகை நிலமும் கடும் வெயில் முதலானவற்றாலே தத்தம் தன்மை கெட்டுப் பயனற்ற பாலை நிலமாம் என்று கூறுவர். இவ்வண்ணமாகப் பாலைக்குத் தனியே நிலமில்லையாகையால் 'நானிலம்' என்றே கவிகளால் வழங்கப்படுவதையொட்டி, இவ்வாழ்வாரும் 'நானிலம்' என்றே பூ$_4$மியை வழங்குகிறார். (முப்புரி நூலொடு மானுரி இலங்கு மார்வினில்) ஒரு கார்மேகத்திலே மின்னல் ஒளியிடுவதுபோலே, சாத்தின பூணூலும், அத்துடன் கூடிய மான்தோலும் விளங்கும் திருமார்பை



த்$_3$விஜனுமாய். (ஒருமாணாகி) ஒப்பில்லாத ஸ்ரீ வாமநனாய்; தானே இன்னுமொருகால் இவ்வடிவுகொள்ளவேணுமென்னிலும் இப்படி வாயாத வடிவையுடையனாய். (ஒருமுறையீரடி மூவுலகளந்தனை) ஒருகால் இரண்டடியாலே மூன்று லோகத்தையும் அளந்துகொண்டாய். இத்தால்— "இந்த்$_3$ரனுக்கு ராஜ்யத்தை மீட்டுக்கொடுத்தாற்போலே என்னுடைய சேஷத்வத்தையும் மீட்டுத்தந்தருளவேணும்" என்கிறார். "தேவர்கள் சென்றிரந்தார்க் கிடர் நீக்கிய

---

தோற்றும்படியிருப்பாயுமாய், இந்த்$_3$ரனுடைய அர்த்தி$_2$த்வம் தலைக்கட்டுகைக்காக இட்டபோதோடு இடாதபோதோடு வாசியற முகமலர்ந்து போம்படி இரப்பிலே தகணேறின வாமந வேஷத்தைப் பரிக்$_3$ரஹித்து, ஒருகால் த்ரைலோக்யத்தையும் ஈரடியாலே

---

உடையையாய். (இருபிறப்பு) இரண்டாம் பிறப்பைத்தரும் உபநயனம் பண்ணின புதுமை தோற்றியிருப்பவனாய். (ஒரு மாண் ஆகி) ஒப்பற்ற ப்$_3$ரஹ்மசாரியாகி. இந்திரன் தன்னை யாசித்த பூ$_4$மியை அவனுக்குப் பெற்றுக் கொடுப்பதற்காக—பிச்சையிட்ட ஸமயத்தோடு, இடாத ஸமயத்தோடு வாசியில்லாமல் முகமலர்ந்து போம்படி இரப்பிலே தழும்பேறின ஒப்பற்ற வாமந ப்$_3$ரஹ்மசாரி வேஷத்தை எடுத்தான் என்கை. தானே மறுபடி ஒருமுறை இவ்வடிவு எடுக்கவேணுமென நினைத்தாலும் இப்படி அமையாது என்னலாம்படியான ஒப்பற்ற வடிவழகைச் சொல்லுகிறது. (ஒருமுறை ஈரடி மூவுலகு அளந்தனை) ஒரே ஸமயத்தில் இரண்டு அடியிலே மூன்று உலகத்தையும் அளந்துகொண்டாய்; இப்படிக் கூறுவதன்மூலம், "இந்திரனுக்கு அவன் விரும்பிய மூவுலக அரசை மீட்டுக்கொடுத்தாற்போலே, எனக்கு நான் விரும்பும் சேஷத்வ ஸாம்ராஜ்யமாகிற அடிசூடும் அரசை மீட்டுத்தந்தருளவேணும்" என்னும் கருத்தைக் காட்டுகிறார். "ஈட்டங்கொள் தேவர்கள் சென்று இரந்தார்க்கு இடர்நீக்கிய கோட்டங்கை வாமனன்" (திருவாய் 7-5-6) என்று உன்னை யாசித்தவர்க்

கோட்டங்கை வாமனனாய் ''என்று உன்னையிரந்தாரிரப்புக்கு நீயுமிரந்து அவர்கள் அபேக்ஷிதம் பார்க்குமவனல்லையோ? இசையாதார் தலைகளில் வைத்த திருவடிகளை இசைந்த என் தலையில் வைத்தாலாகாதோ? ப்ரயோஜநாந்தரபரனுடைய இழவுதீர்த்த உனக்கு அநந்ய ப்ரயோஜநனான என்னுடைய இழவு தீர்க்கலாகாதோ? இந்த்$_3$ரன் கழஞ்சு மண்ணன்றோ இழந்தது; நான் என்னையும் உன்னையுமன்றோ இழந்தது.

---

அளந்துகொண்டாய். ஆசையில்லாதார் தலைமேலேயும் வைக்கும் திருவடிகளை ஆசையுடைய என் தலையிலேயும் வைக்கலாகாதோ? இந்த்$_3$ரனைப்போலே கழஞ்சுமண் பெறுதல், மஹாப$_3$லியைப்போலே ஔதா$_3$ர்யங்கொண்டாடுதல் செய்யவிருக்கிறேனோ நான்? ''உன்னைப் பெறவேணும்'' என்றன்றோ நானர்த்திக்கிறது. உன்னைவைத்து வேறொன்றை இரந்தார்க்கோ நீ இரப்பாளனாய்க் கார்யஞ்செய்வது? உன்னையே இரந்தார் கார்யம் செய்யலாகாதோ? '' मदीयमूर्धानमलङ्करिष्यति-कदा '' ( மதீ$_3$யமூர்த்த$_4$நமலங்கரிஷ்யதி-கதா$_3$ ) என்றிறே நானிருக்கிறது.

---

காக நீயும் யாசகனாகி அவர்கள் கார்யம் செய்பவனாயிற்றே. மற்ற பயனை விரும்பும் இந்திரனுடைய குறை தீர்த்த உனக்கு, உன்னையே பயனாகக்கொண்ட என் குறையைத் தீர்க்க முடியாதோ? இந்திரன் அஸாரமான மண்ணையன்றோ இழந்தான். நான் என்னையும் உன்னையுமன்றோ இழந்து நிற்கிறேன். ஆசையில்லாதார் தலைமேலேயும் வைக்கும் திருவடிகளை, ஆசையுடைய என் தலைமேலேயும் வைக்கலாகாதோ? இந்த்$_3$ரனைப்போலே அற்பமான மண்ணாசையோ, மஹாப$_3$லியைப்போலே 'வண்மையிலே ஒப்பற்றவன்' என்னும் ஔதா$_3$ர்யக$_3$ர்வமோ கொண்டவனல்லனே யான். உன்னைப் பெறவேணும் என்றல்லவோ நான் விரும்புகிறேன். உன்னைவிட்டு வேறொன்றை விரும்புவார்க்குத்தான் நீ யாசகனாகியும் கார்யம் செய்வாயோ? உன்னையே விரும்பினார் கார்யம் செய்யலாகாதோ? ''அடிச்சி



**நாற்றிசை நடுங்க வஞ்சிறைப் பறவை யேறி**
**நால்வாய் மும்மதத் திருசெவி**
**ஒருதனி வேழத் தரந்தையை**
**ஒருநாளிருநீர் மடுவுள் தீர்த்தனை**

ஒரு நாள்—ஒரு காலத்தில், நால் திசை நடுங்க—நாலு தி$_3$க்கிலும் உள்ள ஜனங்களும் நடுங்கும்படியாக, (பெரிய கோபத்தை அடைந்து) அம் சிறை பறவை ஏறி—அழகிய சிறகையுடைய கருடன் மீது ஏறிக்கொண்டு, நால் வாய்—தொங்குகின்ற வாயையும், மும்மதம்—மூவிடங்களில் மத$_3$ நீர்ப்பெருக்கையும், இரு செவி—இரண்டு காதுகளையும் உடையவனாய், ஒரு தனி வேழத்து—துணையற்றவனாய் ஒப்பற்றவனான கஜேந்திரனுடைய, அரந்தையை—துன்பத்தை, இரு நீர் மடுவுள்—ஆழமான நீரையுடைய மடுவின் (கரையிலே எழுந்தருளி) தீர்த்தனை—போக்கியருளினாய்.

---

யோம் தலைமிசை நீ அணியாய் ஆழியங்கண்ணா உன் கோலப் பாதம்'' [திருவாய் 10-3-6] ''படிக்களவாக நிமிர்த்த நின் பாதபங்கயமே தலைக்கணியாய்'' [திருவாய் 9-2-2]

''கதா$_3$ புந: ஶங்க$_2$ரதா$_2$ங்க$_3$ கல்பக
த்$_4$வஜாரவிந்தா$_3$ங்குஶ வஜ்ர லாஞ்ச$_2$நம் |
த்ரிவிக்ரம த்வச்சரணாம்பு$_3$ஜத்$_3$வயம்
மதீ$_3$யமூர்த்த$_4$நமலங்கரிஷ்யதி ||'' [ஸ்தோ-ர 31]

[திரிவிக்கிரமனே! சங்கு, சக்கரம், கல்பகவ்ருக்ஷம், கொடி, தாமரை, அங்குஶம், வஜ்ராயுத$_4$ம், இவைகளை அடையாளமாக உடைய உன் திருவடித்தாமரையிணை என் தலையை எப்போதுதான் அலங்கரிக்கப்போகிறதோ?] என்று உன் அடிசூடும் அரசையன்றோ நான் ஆசைப்பட்டிருக்கிறேன் என்னும் கருத்துக்களும் தோற்றுகின்றன.

(நாற்றிசை யித்யாதி$_3$) பெருமதிப்பரான இந்த்$_3$ராதி$_3$களுக்கேயோ அபேக்ஷிதம் செய்தசென்னில், அன்று; ஆபத்தும் விஸ்வாஸமும் என்கிறது அல்பமுண்டானால் தான் தண்ணியரான திர்யக்குகளுக்கும் அபேக்ஷிதஞ்செய்யுமென்கிறது. (நாற்றிசை நடுங்க) ஸ்ரீக$_3$ஜேந்த்$_3$ராழ்வானுடைய ஆபத்தை நினைத்துக் கலங்கின கலக்கத்தைக்கண்டு "ஜக$_3$த்துக்கு என்ன மிறுக்குப்புகுகிறதோ?" என்று அறியாதே

---

பெருமதிப்பரான இந்த்$_3$ராதி$_3$களுக்காக உன்னையழியமாறிக் கார்யஞ் செய்தவளவேயோ? ஜந்மவ்ருத்தாதி$_3$களால் குறைய நின்ற ஆனை இடர்பட்ட மடுவின் கரையிலே அரைகுலையத் தலைகுலைய வந்து விழுந்தவனன்றோ? (நாற்றிசையித்யாதி$_3$) "ஜக$_3$த்ஸ்ருஷ்ட்யாதி$_3$களுக்கும் ஸங்கல்பித்ததுக்கு அவ்வருகுண்டென்றறியாமையாலே, ஜக$_3$து$_3$பஸம்ஹாரத்துக்கும் அவ்வருகாயிருந்ததி, இதொரு சீற்றமிருந்தபடியென்!" என்று இருந்ததே குடியாக

---

இனி சிறந்த ஜ்ஞாநஶக்திகளை உடைய இந்திரன் முதலானோர்க்குத்தான் தன்னைத்தாழ்த்திக்கொண்டும் கார்யம்செய்வானோ என்னும் கேள்வியெழுந்தவளவில், "அப்படியல்ல; ஆபத்தும் விஸ்வாஸமும் ஒரு சிறிது உண்டானால், பிறப்பு, ஒழுக்கம் முதலானவற்றில் மிகத்தாழ்ந்த விலங்குகளுக்கும்—அவையுள்ளவிடத்திற்குத் தானே நேரே அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து காரியம் செய்வான்" என்கிறார்—(நால்திசை நடுங்க) ஸ்ரீக$_3$ஜேந்திராழ்வானுடைய ஆபத்தைக்கண்டு கலங்கிய கலகத்தின் மிகுதியைக்கண்டு 'உலகிற்கு என்னகேடு விளையப்போகிறதோ?' என்று அறியாமல் அஞ்சி. நாலுதிசையிலுள்ள தே$_3$வர், மனிதர் முதலான அனைவரும் நடுங்கும்படியாக. உலகனைத்தையும் ஸ்ருஷ்டிக்கும்போதுபோலே ஸம்ஹரிக்கும்போதுங்கூட ஸங்கல்பத்தாலேயே ஸம்ஹரிப்பதையும் சீற்றமில்லாமலிருப்பதையும் கண்டுபோந்த நாலுதிசையிலும் வாழும் ப்$_3$ரஹ்மாதி$_3$ சேதனர் அனைவரும் இக்கடுஞ்சீற்றத்தைக்கண்டு. "ஐயோ! உலகனைத்தையும் ஸம்ஹரிக்கும்போதும் காணாத கோபமாயிருக்கிறதே! இப்படிப்பட்ட சீற்



நடுங்க. (அஞ்சிறைப் பரவையேறி) மிக்க அழகையும் வேக$_3$த்தையும் உடைத்தான சிறகையுடைத்தான பெரிய திருவடி மேலே ஏறி. (நால்வாய் மும்மதத் திருசெவி ஒரு தனி வேழத்தரந்தையை) நாலாநின்ற வாயையும், மூன்று மத$_3$த்தையும், இரண்டு செவியையு முடைத்தாய், வேறு துணையின்றிக்கே தன் மிடுக்கற்று நின்ற ஆனையினுடைய மஹாது$_3$:க்க$_2$த்தை. அரந்தை—து$_3$:க்க$_2$ம். (ஒரு

---

எல்லாருமஞ்சும்படியாக. மேருவுக்கினிய மேக$_4$ம்போலே, அழகிய சிறகையுடைய பெரியதிருவடி திருத்தோளிலே ஏறி, பெரிய வேக$_3$த்தோடே நாலா நின்றுள்ள வாயையுடைத்தாய், மூன்று வகைப்பட்ட மத$_3$த்தையுடைத்தாய், இரண்டுசெவியை யுடைத்தாய், வேறு துணையின்றிக்கே அத்$_3$விதீயமாயிருக்கிற ஆனை

---

றத்தினால் என்ன விளையுமோ" என்று அஞ்சும்படியாக என்றபடி. (அம் சிறைப் பறவை ஏறி) 'கருமுகில் தாமரைக் காடு பூத்து, நீடு இருசுடர் இரு புறத்து ஏந்தி, ஏந்து அலர்த்திருவொடும் பொலிய. ஓர் செம்பொற் குன்றின்மேல் வருவபோல், கலுழன் மேல் வந்து தோன்றினான்' (கம்பராமாயணம் — திருஅவதாரப் படலம்] என்கிறபடியே செம்பொற்குன்றான மேருமலையின்மேல் கார்மேகம் ஏறி வருவதுபோலே; மிக்க அழகையும் வேக$_3$த்தையும் உடைய கருட$_3$னுடையதோளின்மீது ஏறி, அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்ததைக் கூறுகிறார். இப்படி ஓடிவந்து ஸாதி$_4$த்த காரியம் யாதென்பதைக் கூறுகிறார்—(நால் வாய் மும்மதத்து இரு செவி ஒரு தனி வேழத்து அரந்தையை) கையெடுத்துக் கதறுகையாலே கீழே தொங்குகின்ற வாயை உடையதாய், (இருகன்னங்கள், குறி ஆகிய) மூன்று அவயவங்களிலிருந்து பொழிகின்ற மத$_3$நீரை உடையதாய், இரண்டு (அல்லது பெரிதான) செவிகளை உடையதாய், வேறு துணையற்றதாய். தன் ப$_3$லம் அழிகையாலே போக்கடியற்ற நிலையிலே ஒப்பற்றதான ஆனையினுடைய பெருந்துன்பத்தை. அரந்தை—அரதி; துன்பம். (ஒரு நாள் இருநீர் மடுவில்

---

(வேழத்து — அரந்தை) — அரதி-து$_3$:க்க$_2$ம். (மும்மதம்)— கபோல மேட்$_4$ரஸ்த்த$_2$லத்ரயம்.

நாளிருநீர் மடுவுள் தீர்த்தனை ) அத்த3சையிலே வேற்று நிலமாய்ப் பெரிய நீர்வெள்ளமான மடுவிலே தீர்த்தாய். "முதலையின் வாயிலே நின்றும் ஆனையை மீட்டாற்போலே ஸம்ஸாரங்கொண்ட என்னையும் மீட்கவேணும்" என்கிறார். **"गज आकर्षते तीरे ग्राह आकर्षते जले। तयोर्द्वन्द्वसमं युद्धं दिव्यं वर्षसहस्रकम् ॥"** (க3ஜ ஆகர்ஷதே தீரே க்3ராஹ ஆகர்ஷதே ஜலே। தயோர்த்3வந்த்3வஸமம் யுத்3த4ம் தி3வ்யம் வர்ஷ ஸஹஸ்ரகம் ॥) என்று—ஆனைக்கு முதலை ஒன்று, எனக்கு முதலை ஐந்து; அது பிடுக்கனை யானை, நான் து3ர்ப்ப3லனென்கிறார்.

---

யுடைய து3:க்க2த்தை—அத்த3சையிலே வேற்றுநிலமாய், மிக்க வெள்ளத்தை உடைத்தான மடுவிலே அரைகுலையத் தலைகுலைய வந்து விழுந்து போக்கினாய்.

---

தீர்த்தனை )ஒப்பற்றதோர் காலத்திலே,அடியானை யானைக்கு வேற்று நிலமாய், அவனுக்கு விரோதி4யான முதலைக்குத் தன் நிலமாய் மிகுந்த நீர்ப்பெருக்கையுடைய மடுக்கரைக்கே—அவ்வாபத்தின் க4னத்தைக்கண்டு அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து ஆனையின் துன்பத்தைத் தீர்த்தருளினாய்.(ஒரு நாள்) இப்படி எம்பெருமானையே ஓடிவரச்செய்த அதுவும் ஒரு நாளே என்று நாளைக் கொண்டாடுகிறார். "முதலையின் வாயில் நின்றும் ஆனையை மீட்டாற்போலே, ஸம்ஸாரத்தின் வாயில் விழுந்துகிடக்கும் என்னையும் மீட்கவேணும்" என்று கருத்து. "யானை கரையை நோக்கி இழுக்கிறது; முதலை நீரைநோக்கி இழுக்கிறது; இப்படியாக அவ்விருவர்க்கும் தே3வ வருஷங்களில் ஆயிரம் வருஷம் ஒருவருக்கொருவர் ஸமமாகப் போர் நடந்தது" [விஷ்ணுத4ர்மம் 69] என்கிற படியே ஆனைக்கு விரோதி4யான முதலை ஒன்று; எனக்கு விரோதி4யான இந்திரிய முதலைகள் ஐந்து. அது ப3லமுள்ள யானை; நான் வலிமையற்றவன். அது சிலகாலம் நோவு பட்டது; நான் அநாதி3காலமாக நோவுபடுகிறேன். எனக்கு உதவ அப்படி ஓடிவரவேண்டாமோ? என்கிறார்.



"**ग्राहं चक्रेण माधवः**" (க்3ராஹம் சக்ரேண மாத4வ:) மடுவிலே போய்ப்புக்கு ஆனையையும் முதலையையுமாக அணைத்துக் கொண்டு போந்து கரையிலேயேறி ஆனைக்கு நலிவுவாராதபடி திருவாழியாலே முதலையைக் கிழிப்பொகட்டானாயிற்று. "ராஜபுத்ரனோடு விளையுண்ட கைக்கூட்டனுக்கும் பால் திரளையிடக்கடவதானான்" என்று பட்டரருளிச் செய்யும்படி. "நால்வாய்மும்மதத் திருசெவி ஒருதனி வேழத்தரந்தையை" என்றாற்போலே சொல்லுவதுக்குக் கருத்தென்னென்னில், ப்ரஜை கிணற்றிலே விழுந்தால் "காதுங்கண்டவாளியும், காலுந்தலையும், வடிவுமிருக்கும்படிகாண்!"

---

( வேழத்தரந்தையை இருநீர் மடுவுள் தீர்த்தனை ) "க்3ராஹம் சக்ரேண மாத4வ:" [ விஷ்ணுத4ர்மம் ] [ முதலையை மாத4வன் சக்கரத்தினால் அறுத்துக் கொன்றான். ] என்கிறபடியே, மிகவிரைவாக மடுவினுள் போய்ச்சேர்ந்து, ஆனையையும், முதலையையும் அணைத்துக்கொண்டுவந்து கரையேறி, ஆனைக்குக் கால்நகத்திற்குக்கூடச் சேதம் வாராதபடி அதிஜாக்3ரதையுடன் ஸுத3ர்ஸந சக்கரத்தைக் கொண்டு முதலையைக் கீறிப் போட்டானாயிற்று. ப4க3வத விரோதி4யான முதலையையும் அணைத்துக்கொண்டு கரையேற வேணுமோ? எனில்: "ராஜபுத்ரனுக்கு மல்யுத்3த4ப் பயிற்சி தருவதற்காக அவனோடு தினந்தோறும் கைகலந்து சண்டையிடும் கைக்கூட்டனுக்கும் பால்சோற்றுருண்டை கொடுத்து வளர்ப்பார்களன்றோ. அதுபோலே, க3ஜேந்திராழ்வானோடு சண்டையிட்ட முதலைக்கும் ப4க3வானாலே அணைக்கப்படும் இப்பேறு கிடைத்தது" என்று பட்டர் அருளிச்செய்வராம். ( நால்வாய் மும்மதத்து, இருசெவி, ஒருதனிவேழத்து ) என்று யானையினுடைய ஒவ்வோரவயவத்தையும் ஸமுதா3யசோபை4யையும் வர்ணிப்பதற்குக் கருத்து என்னவெனில்: கிணற்றில் விழுந்த குழந்தையைக் கரையேற்றிக் காப்பாற்றியவர்கள், "ஆகா! இக்குழந்தையின் காது என்ன அழகு! கழுத்தின் வாளிப்பு ( அமைப்பு )

என்பாரைப்போலே, இடர்பட்ட இதினுடைய அவயவங்கள் அவனுக்கு ஆகர்ஷகமானபடியாலே சொல்லுகிறது. (வேழத்தரந்தையை) எளியராயிருப்பார் நோவுபட்டாற்போலன்றிறே இதினுடைய நோவுபாடு. "परमापदमापन्नः" (பரமாபத3மாபந்ந:) ஸர்வேஶ்வரன் தன்னைப் பேணாதேவந்து விழவேண்டும்படி கரைபுரண்ட ஆபத்தாயிற்று. இவ்வாபத்துக்கு அவதி4யென்னென்னில், "मनसाऽचिन्तयत्" (மநஸாऽசிந்தயத்) வாயால் கூப்பிடுமதோவிற்று; (ஒரு

---

இருந்தபடியே! கால் என்ன அழகு! தலை என்ன அழகு! வடிவழகை வாய்கொண்டு வர்ணிக்க இயலவில்லையே! இழக்கவிருந்த இதை நல்லவேளையாகக் காப்பாற்றினேமே!" என்று ஒவ்வோரவயவத்தின் அழகையும், ஸமுதா3ய ஶோபை4யையும் சொல்லிச்சொல்லி மாய்ந்துபோவது போலே, எம்பெருமான் இடர்பட்ட இதைக் காப்பாற்றியவுடன் இதினுடைய ஒவ்வோரவயவத்திலும், ஸமுதா3ய ஶோபை4யிலும் ஈடுபட்டபடியைச் சொல்லுகிறது. (வேழத்து அரந்தையை) சிறிய ஶரீரமுடையார் துன்பம் போலே சிறிய துன்பமாயிராமல், "விரலுக்குத் தகுந்த வீக்கம்; யானைக்குத் தகுந்த வாதம்" என்று சொல்லுவது போலே, இதினுடைய பெரிய ஶரீரத்துக்கு ஏற்றபடி பெருந்துன்பமாயிருந்தபடி. "பரமாபத3ம் ஆபந்ந: மநஸாऽசிந்தயத் ஹரிம்" [விஷ்ணுத4ர்மம்] [பெரிய ஆபத்தை அடைந்த க3ஜேந்திராழ்வான் ஹரியை மனத்தினால் நினைத்தான்.] என்று ரிஷி இதினுடைய ஆபத்தின் மிகுதியைக் காட்டினார். ஸர்வேஶ்வரன் தன் பெருமை பாராமல் மடுக்கரையிலே வந்து விழவேண்டும்படியான கரைபுரண்ட ஆபத்து என்பதை 'பரமாபத்' என்னும் பத3த்தால் உணர்த்தினார். (மநஸாऽசிந்தயத்) என்று 'மனத்தினாலே நினைத்தான்' என்கையாலே, வாயாலே கூப்பிடவும் ஶக்தியற்று, மனத்தால் உபாயமாக நினைக்கும் நிலையை அடைந்தான் என்று காட்டினார். (ஒருநாள்....தீர்த்தனை) எம்



## முத்தீ நான்மறை ஐவகை வேள்வி
## அறுதொழிலந்தணர் வணங்குந் தன்மையை

முத்தீ—மூவகையான அக்3நிகளையும், நால் மறை—நால் வகையான வேத3ங்களையும், ஐவகை வேள்வி—ஐவகையான யஜ்ஞங்களையும், அறு தொழில்—ஆறுவகையான கருமங்களையும் உடையரான, அந்தணர் வணங்கும் தன்மையை—ப்3ராஹ்மணர்களால் (கர்மயோக3த்தால்) ஆராதி4க்கப்படும் தன்மையை உடையனாயிராநின்றாய்.

---

நாள் இருநீர்மடுவுள் தீர்த்தனை) அங்கு காலம் அளவிட்டிருக்கும், முதலை ஒன்று, தான் ஆனை; இங்கோவென்றால்—காலமநாதி3, இந்த்3ரியங்களைந்து, நானோ து3ர்ப்ப3லன்; ஆனால் வாசி பார்த்துத்தர வேண்டாவோ? [காலைக் கதுவிடுகின்ற கயலொடு வாளை விரவி] ஆந்தராளர் குடியிலே பிறந்து, ஈஶ்வரன் மர்மஜ்ஞையாயிருப்பாளொருத்தி வார்த்தை—ஒரு நீர்ப்புழு நலியப் பொறுக்கமாட்டாதவன்; இரண்டுகிடாய் காலைப்பற்றி நலிகிறது என்கிறாள்.

---

பெருமானுக்கு அந்தரங்க3ரான பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளையாய், ஈஶ்வரனுடைய திருவுள்ளம் எதைச் சொன்னால் பதறும் என்னும் மர்மத்தை அறிந்த ஆண்டாள் "காலைக் கதுவிடுகின்ற கயலொடு வாளை விரவி" [நாச்-திரு 3-5] என்று "ஒரு நீர்ப்புழு க3ஜேந்திரனை நலிவதைப் பொறுக்காத நீ இரண்டு மீன்கள் என் காலைக் கவ்விக் கடிப்பதைப் பொறுத்திருக்கலாமோ?" என்றாற்போலே, "ஒரு முதலை வலிமைமிக்க க3ஜேந்திரனைச் சிலகாலம் நலிந்ததைப் பொறுக்காதவன், ஐந்து இந்திரியங்களாகிற முதலைகள் அநாதி3காலமாக வலிமையற்ற என்னை நலிவதைப் பொறுத்திருக்கலாமோ? அதைக்காட்டிலும் விரைவாக ஓடிவந்து ரக்ஷிக்கவேண்டாமோ?' என்னும் கருத்தைக் காட்டுகிறார் ஆழ்வார்.

(முத்தீயித்யாதி3) உபாயாந்தர நிஷ்ட்டர்க்கும் அவற்றை நடத்திக்கொடுப்புதியிறே, "योगो योगविदां नेता" (யோகோ3 யோக3வித3ாம் நேதா) என்கிறபடியே. (முத்தீ) மூன்று பிள்ளை பெறுவாரைப்போலே கா3ர்ஹபத்ய ஆஹ

---

(முத்தீயித்யாதி3) வர்ணங்களில் உத்க்ருஷ்ட வர்ணமாய், நல்வழி போகக்கடவதா யிருக்கும் ப்3ராஹ்மண ஜாதிக்கடைய ஆஶ்ர யணீயனுயிருக்கும்படியைச் சொல்லுகிறது. (முத்தீயித்யாதி3)மூன்று பிள்ளைபெற்ற தாயைப்போலே, ஆஹவநீய கா3ர்ஹபத்ய த3க்ஷி

---

அந்தரங்கை3யான பிராட்டிக்கு உதவியதை 'வாளியில் அட்டனை' என்றார்; ப்ரயோஜநாந்தரபரனை இந்திரனுக்கு உதவியதை 'மூவுலகளந்தனை' என்றார். அநந்யப்ரயோஜன னாய், அநந்யோபாயனை க3ஜேந்திரனுக்கு உதவியதை 'மடுவுள் தீர்த்தனை' என்றார். இனி, தம் முயற்சியில் பற்று அருமையால், உபாயமல்லாத உபாயாந்தரங்களில் உபாயபு3த்3தி4 வைத்து, அவனோடுகூட அவற்றையும் உபாய மாகப் பற்றுவார்க்கும், அவர்கள் வழியே சென்று, ஒவ் வோரடியிலும் அவ்வுபாயங்களைத் தலைக்கட்டிவைத்து, அவர்கள் விரும்பும் ப2லனை அளிக்கும் பெருமையைப் பேசுகிறார்.— (முத்தீ....) "யோகோ3 யோக3வித3ாம் நேதா" [ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமம் 18, 19] [தானே உபாயமாக வும், மற்றவுபாயங்களைப்பற்றினர்க்கு அவற்றைத் தலைக் கட்டிக்கொடுப்பவனுயுமுள்ளவன்]என்று ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ர நாமத்திலும் தானே நிருபாதி4க உபாயமாயிருக்கும் படியும், ஸோபாதி4கமான உபாயங்களைப் பற்றினர்க்கு அவற்றைத் தலைக்கட்டிக்கொடுப்பவனாயிருக்கும் படியும் பேசப்பட்ட தன்றோ. அவ்வுபாயாந்தரங்களில் முதலாவதான கர்மயோ க3த்தை அநுஷ்டி2ப்பவராய், அதற்கு உறுப்பாக நாலு வர்ணங்களில் மிகவுயர்ந்த ப்3ராஹ்மணவர்ணத்தில் பிறந்து நல்வழிநடக்கும் அந்தணர் அனைவராலும் அக்கர்மயோக3த் தாலே ஆஶ்ரயிக்கத்தக்கவனுயிருப்பதை முதலில் பேசுகிறார்.— (முத்தீ) பெரும் பசியுள்ள மூன்று பிள்ளைகளை ஒரேப்ரஸவத்



வநீய த3க்ஷிணாக்3நிகளையும். (நான்மறை) ருக்3 யஜுஸ் ஸாமா த2ர்வணங்களையுமுடையராய். (ஐவகை வேள்வி) "देवयज्ञः पितृयज्ञो भूतयज्ञो मनुष्ययज्ञो ब्रह्मयज्ञः" (தே3வயஜ்ஞ: பித்ருயஜ்ஞோ பூ4தயஜ்ஞோ மநுஷ்யயஜ்ஞோ ப்3ரஹ்ம யஜ்ஞ:) என்னும் பஞ்சமஹாயஜ்ஞங்களையும்; இத்தால் கர்மயோக3ம் சொல்லிற்று. (அறுதொழில்) யஜநம், யாஜநம், அத்4யயநம், அத்4யாபநம், த3ாநம், ப்ரதிக்3ரஹமென்கிற ஷட்கர்

---

மாக்3நி என்கிற அக்3நித்ரயமும், நாலுவகைப்பட்ட வேத3ங்களும், பஞ்சமஹாயஜ்ஞமும், அத்4யயநம்பண்ணுகை, பண்ணுவிக்கை, யஜிக்கை, யஜிப்பிக்கை, த3ாநம் பண்ணுகை, கொள்ளுகை என்ருற்

---

றில் பெற்றவள் அம்மூன்றையும் பேணமுடியாமல் திண்டாடு வதுபோலே, கா3ர்ஹபத்யம், ஆஹவநீயம், த3க்ஷிணாக்3நி என் னும் மூன்று அநலங்களுக்கும் (எவ்வளவு விரகிட்டாலும் போதாதென்னும் அக்3னிகளுக்கும்)ஒரேஸமயத்தில் பரிசர்யை பண்ணுகிறபடி. (நான்மறை) அக்கர்மயோக3த்தை நன்கு அநுஷ்டி2ப்பதற்குறுப்பாக ருக், யஜுஸ் ஸாமம், அத2ர்வணம் எனும் நாலுவேத3ங்களையும் ஓதியவர்கள். (ஐவகை வேள்வி) தே3வயஜ்ஞம், பித்ருயஜ்ஞம், பூ4தயஜ்ஞம், மநுஷ்யயஜ்ஞம், ப்3ரஹ்மயஜ்ஞம் என்று [தைத்-ஆர 2-10] ஓதப்படும் ஐந்து வகையான யஜ்ஞங்களையும் தினந்தோறும் நடத்துகிறபடி. (அறுதொழில்) யஜநம் (தான் யாக3ம் செய்தல்), யாஜநம் (பிறர்க்கு யாக3ம் செய்வித்தல்), அத்4யயநம் (தான் வேத மோதுதல்), அத்4யாபநம் (பிறர்க்கு வேதம் ஓதுவித்தல்), த3ாநம் (பிறர்க்கு வேண்டியதை அளித்தல்) ப்ரதிக்3ரஹம் (பிறரிடம் வேண்டியதைப் பெறுதல்)என்னும் ஆறுதொழில் களையும் உடையவராயிருக்கிறபடி. மற்ற வர்ணங்களுக்கு இவற்றில் சிலவற்றிலேயே அதி4காரமுண்டு. இத்தால், அநுஷ்டி2க்க அரிதான கர்மயோக3ம் சொல்லப்பட்டது. ப்3ராஹ்மணர்க்குரிய எல்லாப் பெருமைகளையும் பூர்ணமாகப் பெற்றிருப்பவர்களாக இவர்களைப் பேசுகையால், ஜ்ஞாந ஸஹித கர்மயோக3த்தை அநுஷ்டி2ப்பவர்கள் இவர்கள் என்று

**ஐம்புலன் அகத்தினுள் செறுத்து**
**நான்குடனடக்கி முக்குணத் திரண்டவை யகற்றி**
**ஒன்றினில் ஒன்றி நின்று**
**ஆங்கிருபிறப்பறுப்போர் அறியுந் தன்மையை**

ஐம்புலன் — ஐந்து இந்திரியங்களை (வெளியில் பட்டி மேயவொண்ணுதபடி) அகத்தினுள் செறுத்து—உள்ளே யடக்கி. நான்கு உடன் அடக்கி—உண்ணுதல். உறங்குதல். அஞ்சுதல், விஷயபோ$_4$க$_3$ஞ்செய்தல் என்கிற நான்கையும் ஒன்றுக இல்லை செய்து. முக்குணத்து—ஸத்வம். ரஜஸ். தமஸ் என்கிற மூன்று கு$_3$ணங்களில், இரண்டு அவை—ரஜஸ்ஸையும் தமஸ்ஸையும். அகற்றி—விலக்கி, ஒன்றினில்—ஸத்வகு$_3$ணமொன்றிலேயே, ஒன்றி நின்று — பொருந்தியிருந்து. ஆங்கு—அப்படிப்பட்ட ப$_4$க்தியோக$_3$த்தால். இரு பிறப்பு அறுப்போர்—இருவகைப்பட்ட பிறப்புகளை நீக்கிக் கொள்ள வல்ல உபாஸகர்களாலே. அறியும் தன்மையை—அறியத்தக்க ஸ்வபா$_4$வத்தை உடையையாயிராநின்ருய்.

---

மங்களையுமுடையரான. (அந்தணர் வணங்குந்தன்மையை) அநந்யப்ரயோஜநரான ப்$_3$ராஹ்மணராலே ஆஶ்ரயிக்கப்படும் ஸ்வபா$_4$வத்தையுடையையாய்.

---

போலே சொல்லுகிற இவற்றைத் தொழிலாக உடையரான ப்$_3$ராஹ்மணர்க்கு ஆஶ்ரயணீயனுயிருக்கும்படி சொல்லிற்று.

---

விளங்குகிறது. (அந்தணர் வணங்கும் தன்மையை) இக்கர்ம யோக$_3$த்தால் உன்னையே பெறவிரும்பி உன்னை ஆஶ்ரயிக்கும் ப்$_3$ராஹ்மணர்களால் ஆராதி$_4$க்கப்படும் தன்மையை உடையவனுயிருக்கிருய்.

இனி. அங்க$_3$மான இக்கர்மயோக$_3$த்தினுல் அடையப் படுவதாய். இதைக்காட்டிலும் மிகவும் செயற்கரிதாய், ஸம்ஸாரத்தைக்கண்டு ப$_4$யந்து மோக்ஷமடைய விரும்பும்



(ஐம்புலனித்யாதி$_3$) கர்மயோக$_3$த்தை அங்க$_3$மாக உடைத்தான உபாயம் சொல்லப்படுகிறது. (ஐம்புலனகத்தினுள் செறுத்து) சக்ஷுராதீ$_3$ந்த்$_3$ரியங்களை ஶப்$_3$தா$_3$தி$_3$ விஷயங்களிலே போகாமே உள்ளேயடக்கி. (நான்குடனடக்கி) மனோ பு$_3$த்$_3$தி$_4$ சித்தாஹங்காரங்களையும் செறுத்து; ஆஹாரநித்$_3$ராப$_4$யமைது$_2$நங்களையும் தவிர்த்து என்றுமாம்.

---

இனி ஸம்ஸாரப$_4$யபீ$_4$தராய், முமுக்ஷுக்களாயிருப்பார்க்கு ஆஶ்ரயணீயனுயிருக்கும்படி சொல்லுகிறது,— (ஐம்புலனித்யாதி$_3$) ஶ்ரோத்ராதி$_3$களை விஷயங்களில் போகாதபடியாக நியமித்து, "நித்யாநித்யவஸ்துவிவேகம், ஶமத$_3$மாதி$_3$ ஸாத$_4$ந ஸம்பத்து, இஹாமுத்ர

---

உபாஸகர் அநுஷ்டி$_2$க்குமதான ப$_4$க்தியோக$_3$த்தால் அறியப்படுபவனுயிருக்கையைப் பேசுகிருர்.—(ஐம்புலன் அகத்தினுள் செறுத்து) மெய். வாய். கண். மூக்கு. செவி என்னும் ஐந்து வெளி இந்திரியங்களையும். ஶப்$_3$த$_3$ஸ்பர்ஶரூப ரஸக$_3$ந்த$_4$ங்களாகிய வெளி விஷயங்களில் பட்டிமேயாதபடி செய்து உள்ளே அடக்கி; (நான்கு உடன் அடக்கி) உள்ளிந்திரியமான நெஞ்சின் நாலு நிலைகளையும் ஒரே சமயத்தில் அடக்கி. நெஞ்சு மனனம் செய்யும்போது 'மனம்' என்றும். அறியும்போது 'பு$_3$த்$_3$தி$_4$' என்றும். சிந்திக்கும்போது 'சித்தம்' என்றும். அஹங்கரிக்கும் போது 'அஹங்காரம்' என்றும் வழங்கப்படும். இந் நான்கு நிலைகளையும் ஒருசேர அடக்கி. இத்தால் உள் வெளி இந்திரியங்கள் அனைத்தையும் அடக்குவதாகிற செயற்கரிய செயலைச் செய்யவேண்டும் இவர்கள் என்று உணர்த்தப்படுகிறது. (நான்குடனடக்கி) என்று ஸகல ப்ராணிகளுக்கும் பொது இயல்பான ஆஹாரம், நித்$_3$ரை. ப$_4$யம், மைது$_2$நம் (ஆண் பெண் சேர்க்கை) என்னும் நான்கையும் இவர்கள் அடக்கவேண்டும் என்று கூறுவதாகவும் கொள்ளலாம். அல்லது. "நித்யாநித்யவஸ்துவிவேகம். ஶமம். த$_3$மம் முதலான ஸாத$_4$னச்செல்வம். (ப்ராக்ருதமான)

(முக்குணத் திரண்டவையகற்றி) கு3ணத்ரயங்களில் ரஜஸ் தமஸ்ஸுக்களை த்யஜித்து. (ஒன்றினிலொன்றிநின்று) ஸத்வமொன்றிலுமே பொருந்திநின்று. (ஆங்கு) அந்த யோக3த்திலே, (இருபிறப்பறுப்போரறியுந் தன்மையை) புண்யபாபரூபமான கர்மங்களாலே வரும் ஸம்ஸாரத்தையறுக்கும் உபாஸகராலே அறியப்படும் ஸ்வபா4வத்தையுடையையாய்.

---

ப2லபோ4க3விராக3ம். முமுக்ஷுத்வம்'' என்றாற்போலே சொல்லுகிற ஸாத4நசதுஷ்டயத்தையுமுடையராய். அன்றிக்கே ஆஹாராதி3களைத் தவிர்த்து. ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களில் வைத்துக்கொண்டு ரஜஸ்தமஸ்ஸுக்களைக் கழித்து. நிஷ்க்ருஷ்ட ஸத்வத்தையுடையராய்க்கொண்டு நின்று. அந்த யோக3த்தாலே புண்ய பாபரூப கர்மங்களடியான ஸாம்ஸாரிகது3:க2த்தை அறுத்துக்கொள்ள வேணுமென்றிருப்பார் அறியும் ஸ்வபா4வத்தையுடையனாயிருக்கும்.

---

இம்மை மறுமைப்பயன்களில் விருப்பற்றிருக்கை. மோக்ஷமடைவதில் விருப்பமுடையவனாயிருக்கை'' என்கிற நான்கு மோக்ஷ ஸாத4னங்களையும் தம்முள் கொண்டவராயிருப்பதைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். (முக்குணத்து இரண்டவை அகற்றி) ஸத்வம், ரஜஸ்ஸு தமஸ்ஸு என்னும் மூன்று ப்ராக்ருத கு3ணங்களில், கீழ்நோக்கி இழுத்துச் செல்லும் ரஜஸ்தமஸ்ஸுக்களை மிகமுயன்று விலக்கி. (ஒன்றினில் ஒன்றிநின்று) எஞ்சிய ஸத்வகு3ணம் ஒன்றிலேயே பொருந்தி நின்று. (ஆங்கு) அக்கர்மயோக3ஸாத்4யமான ப4க்தியோக3த்தாலே; (இருபிறப்பு அறுப்போர்) புண்யபாபமான இருவினைகளாலே ஏற்படும் புண்யஜந்மம், பாபஜந்மம் என்னும் இருவகைப்பட்ட பிறப்புக்களை அறுக்கின்ற உபாஸகர்களால்; (அறியும் தன்மையை) அறியப்படும் கு3ணங்களை உடையை. இங்கு பிறப்பைச்சொன்னது ஸம்ஸாரத்துக்கு உபலக்ஷணம். (ஆங்கு பிறப்பு அறுப்போர்) என்று கூட்டி. 'ப4க்தியோக3த்தாலே பிறப்பறுப்போர்' என்றும் பொருள் கொள்ளலாம். அப்படியல்லாமல் (ஆங்கு அறியும்) என்று கூட்டி. 'ப4க்தியோக3த்திலே உபாஸகர் அறிகின்ற' என்றும் பொருள் கொள்ளலாம்.



**முக்கண் நாற்றோள் ஐவாயரவோடு**
**ஆறுபொதி சடையோன்**
**அறிவருந் தன்மைப்பெருமையுள் நின்றனை**

முக்கண்—மூன்று கண்களையும், நால் தோள்—நான்கு தோள்களையும். ஐவாய் அரவோடு—ஐந்து வாயையுடைய பாம்பையும். ஆறு பொதி சடையோன்—க3ங்கா3நதி3 அமைந்த

---

இப்படியிருந்த யோக3த்தாலே அநுப4விக்கையாவது - ஶ்ரீக3ஜேந்த்3ராழ்வானுடைய மிடுக்குள்ள த3ஶையோடொக்குமத்தனை; ஆனபின்பு அவனையே உபாயமாகப் பற்றிப் பிழைக்கவேணும்.

---

ஸாத4நாந்தர பரிக்3ரஹம் பண்ணினார் உன்னைப்பெற்றுப் போகாநிற்க, உன்னையே ஸாத4நமாகப் பரிக்3ரஹித்த நான் உன்னைப்பெறாதே போவதே!

---

''முத்தீ' என்று தொடங்கி இதுவரையில் சொன்னதின் கருத்து என்னவெனில்: ''இப்படி செயற்கரிய ஜ்ஞானஸஹித கர்ம ப4க்தியோக3ங்களாலே ஸம்ஸாரத்தைப் போக்கி எம்பெருமானை அனுப4விக்க நினைக்கையானது—ஸ்ரீக3ஜேந்திராழ்வான் தன் மிடுக்காலே முதலையை வென்று எம்பெருமானின் திருவடிகளில் பூவையிடப் பார்த்த நிலையோடு ஒக்கும். பெரும்பாலும் இழந்தேபோமித்தனை. ஆகையால் அவனையே உபாயமாகப் பற்றிப்பிழைக்கவேணும்'' என்றும், ''செயற்கரியவாய். ஸ்வரூபவிருத்3த4ங்களாய். உண்மையில் மோக்ஷோபாயமல்லாதவையான ஸாத4நாந்தரங்களைப்பற்றினவர்களிலும் சிலர் அரும்பாடுபட்டு உன்னைப்பெற்றுப்போகாநிற்க, ஸித்3த4மாய். ஸ்வரூபாநுரூபமாய். உண்மையான மோக்ஷோபாயமான உன்னை உபாயமாகப்பற்றிய நான் உன்னைப் பெறாதொழிவதே!'' என்றும் கருத்துக்களை உள்ளடக்கி. ''முத்தீ'' என்று தொடங்கி. ''அறியும் தன்மையை'' என்பதீறாக அருளிச்செய்தாராயிற்று.

ஜடையையும் உடையனான ருத்3ரனுக்கு, அறிவு அரு— அறிய இயலாத, தன்மை—ஸ்வபா4வத்தை உடையனா யிருக்கையாகிற. பெருமையுள்—பெருமையிலே, நின்றனை— இராநின்றாய்.

( முக்கணித்யாதி3 ) தந்தாமுடைய கண்களில் மிகுதி யாலும் ஜ்ஞாநாதி4க்யமென்கிற இதுவே ஏற்றமாகக் கணிசிப்பார்க்கும், அவர்களுக்கும் எட்டாத ஸ்வபா4வத்தை உடையவனென்கிறது. (முக்கண் நால்தோள்) மூன்று

அபி4மாநிகளாயிருப்பார் எத்தனையேனும் அதிஶயித ஜ்ஞாநரா யிருந்தார்களேயாகிலும், அவர்களுக்கும் அறியவொண்ணாதபடி யான உத்கர்ஷம் சொல்லுகிறது.(முக்கணித்யாதி3)லலாடநேத்ரனாய், "ஸர்வேஶ்வரன் நாலுதோளும் தானுமாயிருந்தான்" என்று

இனி, "உபாஸகர்களால் தத்தம் உபாஸநங்களில் அறியப்படும் கு3ணங்களை உடையை என்று சொன்னது, அவர்கள் அறிந்தவாறு அநுஸந்தி4த்தபடியைச் சொன்னதே யொழிய, அளவிட்டு அறிந்தபடியைக்கூறியதல்ல" என்று காட்டுவதற்காக, சிறப்புற்ற ஜ்ஞாநமுடைய ருத்3ரனாலும் அளவிட்டு அறியப்படாத தன்மையுடையவன் என்பதைக் காட்டுகிறார்.—(முக்கண்...) ஸ்வாபதே3ஶத்தில் அறிவைக் காட்டும் கண்களில் மிகுதியாலும், "ஈஶ்வராத் ஜ்ஞாநமந் விச்சே2த்" [சிவனிடமிருந்து அறிவைப் பெறவிரும்பவேண் டும் ] என்று பிறர்க்கு அறிவளிப்பவனாக ப்ரஸித்3தி4யிருப்ப தாலும் தன்னைப்பேரறிவாளனாக அபி4மானித்திருக்கும் ருத்3ரன் தன் பெருத்த அறிவைக்கொண்டு அவனை அறியப் பார்த்தால், அந்த ருத்3ரனுக்கும் எட்டாத இயல்வை உடையவன் என்கிறது. (முக்கண்) மூன்றுகண்களை உடைய வன்; கண்களின் மிகுதி அறிவுமிகுதியைக் காட்டுகிறது. ( நால்தோள் ) ஸர்வேஶ்வரன் சதுர்பு4ஜனாயிருப்பதைப் பார்த்துத் தானும் நாலு தோள்களோடு கூடியிருப்பவன்; ஶக்தியிலும் மிகுந்தவன் என்று காட்டுகிறது. "ஒன் றிரண்டு கண்ணினானும் உன்னை ஏத்தவல்லவனே" [திருச்



கண்களையும் நான்குதோளையுமுடையனாகையாலே ப3ஹு பரிகரனாய்; (ஐவாயரவோடு ஆறு பொதி சடையோன்) ஐந்துவாயையுடைய பாம்பையும் க3ங்கை3யையும் ஏகதே3ஶத் திலே அடக்கின ஜடையையுடையனாகையாலே, அதி4க ஶக்தனாயிருந்துள்ள ருத்3ரனும், ( அறிவருந் தன்மைப் பெருமையுள் நின்றனை ) இப்பிடார்கொண்டு அறிய வொண்ணாத ஸ்வபா4வமாகிற பெருமையையுடையையாய் நின்றாய். ஆகையாலே "பெரிய கிழாயான ருத்3ராதி3கள்

தானும் நாலுதோளையுமுடையனாய், ஐந்துவாயை யுடைய அரவை யுடையனாய், க3ங்கை3யை அடக்கின ஜடையையுடையனான ருத்3ரன். தன்னுயர்த்தியெல்லாம்கொண்டு அறியப்பார்த்தாலும் அறியவொண்ணாத ஸ்வபா4வமாகிற பெருமையை உடையை யாய்நின்றாய். கிழாயார் படுகிறது இதுவானால் நானுன்னை அறிகை யென்றொரு பொருளுண்டோ ?

சந்த 7] என்கிறபடியே இப்படி அறிவதற்கு உறுப்பான ஜ்ஞாந ஶக்திகள் மிகுந்தவனாலும் அறிய இயலாது என்று காட்டுவதன் மூலம் மற்றுள்ளார் அறிய ப்ரஸக்தியேயில்லை என்று உணர்த்துகிறார். (ஐவாய் அரவோடு ஆறுபொதி சடையோன் )ஐந்து வாயையுடைய பாம்பையும், க3ங்கை3யை யும் ஒருபகுதியில் பொதிந்துகொண்டிருக்கும் சடையை யுடையவன். இதுவும் இவனுடைய சக்தியின் மிகுதியைக் காட்டுகிறது. "அரவோடு ஆறு பொதி" என்றதால் இரண் டும் சடையிலிருப்பதைக் கூறுகிறதாகவுமாம்; அல்லது 'அர வோடு' என்றது அரவம் ஶரீரத்தில் இருப்பதைக் கூறுகிற தாகவுமாம். (அறிவரும் தன்மைப் பெருமையுள் நின்றனை ) இந்த ஜ்ஞாநஶக்திகள் எல்லாம் கொண்டும் அறிய முடியாத ஸ்வபா4வமாகிற பெருமையை உடையவனாயிருந் தாய். இத்தால், "மிக்க ஜ்ஞாநஶக்திகளையுடைய பெருந் தலையான ருத்3ரன் முதலானார் நிலையே இதுவானபின்பு அற்பமான ஜ்ஞாநஶக்திகளையுடைய என்னைப்போன்றவர்

கிழாய்-கிழாயான். மிஶ்ரரென்னுமாபோலே ஶ்ரேஷ்ட2வாசகம். வ்யங்க்3யோக்தி.

## ஏழுல கெயிற்றினிற் கொண்டனை

ஏழ் உலகு—உலகங்களை யெல்லாம், எயிற்றினில் கொண்டனை—(ஸ்ரீ வராஹமாகி) த$_3$ந்தத்தில் எடுத்துக்கொண்டாய்;

---

நிலை இதுவானால் க்ஷுத்$_3$ரரான எங்களுக்குப் பெற விரகுண்டோ? நீயே விஷயீகரிக்குமித்தனை'' என்று கருத்து.

( ஏழுலகெயிற்றினில் கொண்டனை ) ஆபத்து வந்தால் ஶக்தனோடு அஶக்தனோடு வாசியின்றிக்கே ஸர்வப்ராணிகளுக்கும் உதவியருளினாய். மஹாவராஹமாய்—ப்ரளயங்கொண்ட ஏழுலகத்தையும் திருவெயிற்றிலே வைத்தருளினாய். இத்தால், ''ப்ரளயங்கொண்ட பூ$_4$மியையெடுத்

---

( ஏழுலகெயிற்றினிற் கொண்டனை ) ஆபத்து வந்தவன்று அந்த ருத்$_3$ராதி$_3$களோ, நீயோ உதவினார்? ப்ரளயங்கொண்டு அண்ட$_3$பி$_4$த்தியிலே புக்குச் சேர்ந்த லோகங்களை மஹாவராஹமாய்ப் புக்கிடந்தெடுத்துத் திருவெயிற்றில் ஏகதே$_3$ஶத்திலே ஒருநீலமணி

---

கள் அவைகொண்டு உன்னைப் பெற இயலுமோ? நீயே உனது நிர்ஹேதுக க்ருபையாலே எனக்கு அருள்புரிய வேணும்'' என்னும் கருத்தைக் காட்டுகிறார்.

(ஏழுலகு எயிற்றினில் கொண்டனை) இவ்வுலகிற்கு ப்ரளயத்தினாலே ஆபத்து வந்தபோது அந்த ருத்$_3$ராதி$_3$கள் உதவவில்லையே! நீயன்றோ உதவினாய். (ஏழுலகு) ஶக்தியுள்ள அந்த ருத்$_3$ராதி$_3$களோடு, நம்மோடு வாசியற அனைவரையும் ப்ரளயங்கொண்டபோது, அண்டச் சுவற்றிலே போய் ஓட்டிக்கொண்டிருந்த எல்லாவுலகங்களையும் சேற்றுக்கும் நீருக்கும் தயங்காத மஹாவராஹரூபத்தை எடுத்துக்கொண்டு புகுந்து குத்தியெடுத்து வெள்ளைத் தந்தத்தின் நுனியிலே—மல்லிகையிலே வண்டுபோலும், வெள்ளிப் பூணிலே ஒரு நீலமணியை அழுத்தினாற்போலும் ஒளி விடும்படி வைத்துக்கொண்டாய். இத்தால், ''ப்ரளயங்கொண்ட பூ$_4$மியை எடுத்தாற்போலே, ஸம்ஸாரப்ரளயங்கொண்ட



## கூறிய அறுசுவைப் பயனுமாயினை

கூறிய அறுசுவை பயனும் ஆயினை—(சாஸ்திரங்களில்) சொல்லப்பட்டுள்ள ஆறு வகை ரஸங்களாகிற ப்ரயோஜநமும் நீயேயாயிராநின்றாய்;

---

தாற்போலே ப$_4$வார்ணவங்கொண்ட என்னையுமெடுத்தருளவேணும்'' என்கிறார்.

( கூறியவறுசுவைப்பயனுமாயினை ) மநுஷ்யர்க்கு போ$_4$க்$_3$யமான ஷட்$_3$ரஸரூபமான ப்ரயோஜநமானாய். ''என்னுடைய ப்ரயோஜநத்தையுமெனக்குத் தந்தருளவேணும்'' என்கிறார்.

---

அழுத்தினாற்போலே கிடக்கும்படி வைத்தாய். ஸம்ஸாரப்ரளயங்கொண்ட என்னையோ எடுக்கலாகாது?

( கூறியவித்யாதி$_3$ ) ஶாஸ்த்ரங்களால் சொல்லப்படுகிற ஷட்$_3$ரஸங்களினுடைய ப்ரயோஜநரூபமாயிருந்துவைத்து என்னுடைய ப்ரயோஜநத்தை எனக்குத் தரவேணும்.

---

என்னையும் எடுத்தருளவேணும்'' என்னும் கருத்தை உணர்த்துகிறார். ''ஏழுலகு'' என்றது மேலும், கீழுமுள்ள ஈரேழுலகங்களைக் கூறுவதன்மூலம் ஸகலலோகங்களையும் உபலக்ஷிக்கிறது.

(கூறிய அறுசுவைப் பயனும் ஆயினை) (இவ்வுலகில்) மனிதர்களுக்குப் பயனாக (ஶாஸ்த்ரங்களில்) கூறப்படும் உப்பு, புளிப்பு, துவர்ப்பு, இனிப்பு, கார்ப்பு (காரம்), கைப்பு (கசப்பு) என்னும் ஆறு சுவைகளாகவும் ஆனாய். ''அறுசுவை அடிசில் என்கோ'' [திருவாய் 3-4-5] என்றார் நம்மாழ்வாரும். ''அவர்களுக்கு இனிய அறுசுவை அடிசில் ஆகி, அவர்கள் விரும்பும் பயனை அளிப்பதுபோல் எனக்கு இனிய பயனாயிருக்கும் ஷட்$_3$ரஸாந்நம் (அறுசுவை அடிசில்) ஆன உன்னை எனக்குத் தந்தருளவேணும்'' என்னும் கருத்தை இதனால் காட்டுகிறார்.

**சுடர்விடும் ஐம்படை அங்கையுளமர்ந்தனை**
**சுந்தர நாற்றோள் முந்நீர் வண்ண**

அம் கையுள்—அழகிய திருக்கைகளில், சுடர் விடும் ஐ படை—ஒளிவிடாநின்ற பஞ்சாயுத$_4$ங்களும், அமர்ந்தனை—பொருந்தப்பெற்றாய்; சுந்தரம் நால் தோள்—அழகிய நான்கு திருத்தோள்களை உடையனாய், முந்நீர் வண்ண-கடல்போன்ற வடிவையுமுடையனான எம்பெருமானே!

---

(சுடர்விடும் ஐம்படை அங்கையுளமர்ந்தனை) தம்முடைய போ$_4$க்$_3$யமிருக்கும்படியை அருளிச்செய்கிறார். (சுடர்விடுமைம்படை அங்கையுளமர்ந்தனை) மிகவும் விளங்காநின்றுள்ள பஞ்சாயுத$_4$ங்களையும், வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும்படியாயிருந்துள்ள திருக்கைகளினுள்ளே ஆப$_4$ரணம்போலே அமரும்படி த$_4$ரித்தாய்.

(சுந்தரநாற்றோள்) அழகை வகுத்தாற்போலே நாலு தோளையுமுடையையாய். (முந்நீர்வண்ண) ஶ்ரமஹரமான வடிவையுடையவனே!

---

(சுடரித்யாதி$_3$) மிகவும் ப்ரகாஶத்தை உடைத்தாயிருக்கிற தி$_3$வ்யாயுத$_4$ங்களை—வெறும்புறத்திலேஆலத்தி வழிக்கவேண்டும்படியான அழகிய திருக்கையிலே த$_4$ரிப்பாயாய், தனக்குத்தானே அழகை விளைப்பதான நாலு திருத்தோள்களையுடையையாய், கடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையவனே!

---

தமக்கு அறுசுவையடிசில் ஐந்து ஆயுத$_4$ங்களும் அவற்றை ஏந்திநிற்கும் அழகிய கைகளுமே என்பதைக் காட்டுகிறார்.—(சுடர்விடும் ஐம்படை அங்கையுள் அமர்ந்தனை) மிகவும் விளங்காநிற்கும் ஶங்க$_3$ம், சக்ரம், க$_3$தை$_3$, ஶார்ங்க$_3$ம், நாந்த$_3$கம் என்னும் ஐந்து ஆயுத$_4$ங்களையும்—அவையில்லாவிடினும் த்$_3$ருஷ்டி பரிஹாரம் செய்யவேண்டும்படி அழகாயிருக்கும் திருக்கைகளிலே ஆப$_4$ரணம்போலே த$_4$ரித்தருளினாய்!



**நின்னீரடி யொன்றிய மனத்தால்**
**ஒருமதி முகத்து மங்கையரிருவரும் மல(ெ)ரன**
**அங்கையின் முப்பொழுதும் வருட**
**அறி துயிலமர்ந்தனை**

நின் ஈர் அடி—உனது இரு திருவடிகளில், ஒன்றிய மனத்தால்—பொருந்திய நெஞ்சுடன், ஒரு மதிமுகத்து மங்கையர் இருவரும்—ஒப்பற்ற சந்திரன் போன்ற திருமுகத்தையுடைய திருமடந்தை மண்மடந்தை யிருவரும், மலர் என அம் கையின்—மலர் எனத்தக்க (தங்களது) அழகிய கைகளாலே, முப்பொழுதும்—எப்போதும், வருட—பிடிக்க, அறி துயில் அமர்ந்தனை—யோக$_3$நித்திரையில் எழுந்தருளியிராநின்றாய்.

---

(நின்னீரடியித்யாதி$_3$) தம்முடைய அபேக்ஷிதம் பெறுகைக்குப் புருஷகாரமுண்டென்கிறார். (நின்னீரடியொன்றிய

---

(நின்னித்யாதி$_3$) தேவரீர் திருவடிகளிலே ஒருமைப்பட்ட நெஞ்சை யுடையராய், சந்த்$_3$ரனைப்போலே த$_3$ர்ஶநீயமாய்க் குளிர்ந்த

---

(சுந்தர நால்தோள் மூந்நீர்வண்ண) அழகு என்னும் தத்துவத்தை நாலு கூறிட்டதுபோல் விளங்குகின்றனவாய். "ஸர்வபூ$_4$ஷண பூ$_4$ஷார்ஹா: பா$_3$ஹவ:" [ரா-கி 3-15] [எல்லா ஆப$_4$ரணங்களையும் அலங்கரிக்கத்தக்க தோள்கள்] என்கிறபடியே அழகுக்கு ஓர் ஆப$_4$ரணத்தை எதிர்பாராமல் தமக்குத் தாமே அழகை விளைப்பவையாய், உண்மையில் ஆப$_4$ரணத்துக்கும் அழகு கொடுப்பவையான திருத்தோள்களை உடையவனாய். ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் என்னும் மூன்றும் சேர்ந்தமையால் 'மூந்நீர்' என்று வழங்கப்படும் கடல்போலே கண்டார் களைப்பை ஆற்றும் வடிவழகை உடையவனே! இவ்வடிவழகை என்னை முற்றூட்டாக அநுப$_4$விப்பிக்கவேணும் என்று கருத்து.

(நின்னீரடி....) இப்பயனைப் பெறுவதற்குப் புருஷகார பூ$_3$லமும் உண்டு என்று காட்டுகிறார். (நின் ஈரடி ஒன்றிய

மனத்தால்) அநந்யபோ$_4$க$_3$ரஸராய். (ஒருமதிமுகத்து மங்கையர் இருவரும்) கல்மஷங்கழற்றின பூர்ண சந்த்$_3$ரனைப்போலே, தந்தாம் போ$_4$க$_3$த்தைக் கோட்சொல்லாநின்ற முக$_2$த்தையுடையராய். (மங்கையர்) "तुल्यशीलवयोवृत्तां" (துல்யஶீலவயோ வ்ருத்தாம்) என்றும், "युवतिश्च कुमारिणी" (யுவதிஶ்ச குமாரிணீ) என்றும் தங்கள் பருவத்தாலே பிச்சேற்றவல்ல பிராட்டிமார் இருவரும். (மலரெனவங்கையில்) புஷ்பத்தை த்$_3$ருஷ்டாந்திக்கவொண்ணாத மென்மையையுடையவான திருக்கைகளாலே. (முப்பொழுதும் வருட) ஸர்வகாலமும் வருட. (அறிதுயில்) ஆஶ்ரித ஸம்ரக்ஷணப்ரகாரத்தை அநுஸந்தி$_4$க்கை. (அமர்ந்தனை) வீசிவில் விட்டு எழுப்பினாலும் எழுப்பப்போகாது.

---

முக$_2$த்தை உடையராயிருக்கிற பெரிய பிராட்டியாரும் ஸ்ரீபூ$_4$மிப் பிராட்டியாரும் பூத்தொட்டாற்போலேயிருக்கிற ம்ருது$_3$வான திருக்கைகளாலே திருவடிகளை வருட, ஜக$_3$த்$_3$ ரக்ஷணாநுரூபமான யோக$_3$நித்$_3$ரையிலே ஒருப்பட்டிருந்தாய்; எனக்குப் புருஷகாரமில்லாமே இழக்கிறேனோ?

---

மனத்தால்) தேவரீருடைய இரு திருவடிகளிலேயே ஒருமைப்பட்டிருக்கும் நெஞ்சை உடையவர்களாய்; இத்தால் இவர்களுடைய அநந்யபோ$_4$க்$_3$யத்வம் சொல்லப்பட்டதாயிற்று. (ஒரு மதி முகத்து) உலகிற்காணும் களங்கமுள்ள சந்திரனைப்போலல்லாமல், களங்கமற்றிருக்கையாலே ஒப்பற்றதொரு பூர்ண சந்திரனைப்போலே அழகியதாய், எம்பெருமானைக் கண்களாரப் பருகுவதைக் காட்டித் தருவதாய், குளிர்ந்ததான முக$_2$த்தை உடையராயிருக்கும். (மங்கையர் இருவரும்) "துல்யஶீலவயோ வ்ருத்தாம்" [ரா-ஸு 16-5] [ஒத்த கு$_3$ணம், வயஸ்ஸு, ஒழுக்கம் ஆகியவற்றை உடையவள்] என்றும், 'யுவதிஶ்ச குமாரிணீ" [குமரிப்பருவத்தின் மேல் எல்லையிலும், மங்கைப்பருவத்தின் தொடக்கத்திலும் இருப்பவள்] என்றும் சொல்லுகிறபடியே. தங்கள் பருவத்தாலே. "பார்வண்ணமடமங்கை பத்தர் பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு" [திருநெடு 18] என்கிறபடியே அவனையும் ப$_4$க்தனாகவும் பித்தனாகவும் ஆக்கவல்ல திருமடந்தை மண்மடந்தைகளாகிய பிராட்டிமார் இருவரும்.



## நெறிமுறை நால்வகை வருணமு மாயினை

நெறி முறை—சாஸ்திர முறைப்படியே நடக்கும். நால் வகை வருணமும் ஆயினை—நான்கு வகைப்பட்ட வர்ணங்களுக்கும் நிர்வாஹகனாயிராநின்றாய்;

---

(மலர் அன அங்கையின்) பூவால் தொட்டாற்போலே மென்மை மிக்கிருக்கும் அழகிய திருக்கைகளாலே. 'மலர் என அங்கையின்' என்றும் பாட$_2$ம் காண்கிறது. 'மலரைப் போன்றவை இக்கைகள்' என்று மலரை உவமையிட நினைத்தால், அவற்றைவிட அழகும், மென்மை, நிறம், மணம் முதலான பெருமைகளைக்கொண்டிருக்கையால் அவற்றை உவமையிடவொண்ணாதபடி சிறப்புப்பெற்ற திருக்கைகளாலே என்று கருத்து. "சந்த்$_3$ர காந்தாநநம் ராமம் அதீவ ப்ரியத$_3$ர்ஶநம்" [ரா-அ 3-29] [சந்திரனைப்போன்று இனியவனாய், அதைக்காட்டிலும் இனிய காட்சியை உடையவனான ராமனை] என்றாற்போலே. (முப்பொழுதும் வருட) எதிர், நிகழ், கழிவு எனப்படும் முக்காலத்திலும் "வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி" [திருவாய் 9-2-10] என்கிறபடியே கூசிப்பிடிக்கும்படியாக. (அறிதுயில் அமர்ந்தனை) 'உலகனைத்தையும், குறிப்பாக அடியார்களையும் ரக்ஷிப்பது எப்படி?' என்று சிந்தித்துக்கொண்டேயிருக்கையாலே, வில்லாலடித்து எழுப்பினாலும் எழுந்திருக்கமாட்டாத நித்$_3$ரையிலே ஈடுபட்டிருந்தாய்! "நின் ஈரடி....மங்கையர் இருவரும்....அடிவருட" என்கையால் "புருஷகாரமில்லாமையால் நான் என் பயனைப் பெறுமற்போக இடமில்லை" என்றும், "அறிதுயில் அமர்ந்தனை" என்கையால் "நீ என்னைப் பற்றிச் சிந்திக்காமையினால் என் பயனைப் பெறுமற்போக இடமில்லை" என்றும் கருத்துக்களைக் காட்டுகிறார்.

(நெறிமுறையித்யாதி3) முன்பு அநுஸந்தி4த்தபடியே ரக்ஷித்த ரக்ஷணப்ரகாரம் சொல்லுகிறது. (நெறிமுறை) ஶாஸ்த்ர மர்யாதை3 தப்பாதபடி. (நால்வகை வருணமுமாயினை) சாதுர்வர்ண்யமும் நீயிட்ட வழக்கு; ஆத்மாக்களுக்கு வர்ணங்களைக் கொடுத்ததும். அவர்களுடைய அநுஷ்டா2நத்துக்கு ஆராத்4யனாயிருப்பானும் அவனிறே. "अहं हि सर्वयज्ञानां भोक्ता" (அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போ4க்தா) என்றும். "वर्णाश्रमाचारवता पुरुषेण परः पुमान्। विष्णुराराध्यते पन्था नान्यस्तत्तोषकारकः॥" (வர்ணாஶ்ரமாசாரவதா புருஷேண பர: புமாந் । விஷ்ணுராராத்4யதே பந்தா2 நாந்யஸ்

---

(நெறியித்யாதி3) ஶாஸ்த்ர மர்யாதை3 தப்பாதபடி முறையிலே

---

இனி, அறிதுயில் அமர்ந்து சிந்தித்தபடியே ரக்ஷித்த படியைச் சொல்லுகிறது.— (நெறிமுறை நால்வகை வருணமும் ஆயினை) ஶாஸ்த்ரவரம்பு தப்பாதபடி முறையிலே நடக்கிறதாய், ப்3ராஹ்மணர், க்ஷத்ரியர், வைஶ்யர், ஶூத்3ரர் என்று நாலு வகைப்பட்டதான வர்ணங்களாகவும் ஆகிறாய். இந்த நாலுவர்ணங்களும் உன்னதீ4னமென்றபடி. ஆத்மாக்களுக்கு இந்நாலு வர்ணங்களையும் கொடுத்தது நீயேயாகையாலும், அவர்களுடைய வர்ணத்திற்குரிய அநுஷ்டா2நங்களினால் ஆராதி4க்கப்படுபவன் நீயேயாகையாலும் 'நாலு வர்ணமும் நீயே' என்று சொல்லலாம் என்று கருத்து. "அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போ4க்தா ச ப்ரபு4ரேவ ச" [கீ3தை 9-24] [(எனக்கு ஆராத4னமான) எல்லா யஜ்ஞங்களையும் அநுப4விப்பவன் நானே; அவற்றுக்குப் ப2லனளிக்கும் ப்ரபு4வும் நானே.] என்றும்,

"வர்ணாஶ்ரமாசாரவதா புருஷேண பர: புமாந் ।
விஷ்ணுராராத்4யதே பந்தா2 நாந்யஸ் தத்தோஷகாரக: ॥"
[வி-பு 3-8-9]

[அந்தந்த வர்ணாஶ்ரமங்களுக்குரிய ஒழுக்கத்தை உடைய புருஷனாலேயே பரமபுருஷனான விஷ்ணு ஆராதி4க்கப்படு



## மேதகு மைம்பெரும் பூதமும் நீயே

மே தகும் ஐ பெரு பூதமும் நீயே—ஆன்மாக்கள் புகுந்து பொருந்தத்தக்க ஐந்து மஹா பூ4தங்களுக்கும் நீயே அந்தர்யாமியா யிராநின்றாய்;

---

தத்தோஷகாரக: ॥) என்றும், "चातुर्वर्ण्यं मया सृष्टं" (சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம்) என்றும் சொல்லக் கடவதிறே.

---

நடக்கிற நாலுவகைப்பட்ட வர்ணங்களும் நீயிட்ட வழக்காயிருக்

---

கிறான்; வேறு எவ்வழியும் அவனுக்கு உகப்பையளிப்பதல்ல.] என்றும் "சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம்" [கீ3தை 4-13] [நாலு வர்ணங்களும் என்னால் படைக்கப்பட்டன.] என்றும் இவ்வர்த்த2ங்கள் ஶாஸ்த்ரங்களில் கூறப்பட்டன்றோ: [இவ்விடத்தில் 'வருணமுமாயினை' என்றதற்கு வரிக்கப்படுகிறவனாகிறாய் என்னும் பொருளைப் பெரியவாச்சான் பிள்ளை திருவுள்ளம் பற்றுவதாக அரும்பதவுரைகாரர் எழுதியது பொருத்தமுடையதன்று. "நால்வகை வருணம்" என்று ஆழ்வார் விஶேஷித்திருப்பது அப்பொருளில் பொருந்தாது. "ஆத்மாக்களுக்கு" என்று தொடங்கியுள்ள வாக்யங்களில் பெரியவாச்சான் பிள்ளையும், "வருணமுமாயினை" என்னும் ஸாமாநாதி4கரண்யப்ரயோக3ம், எம்பெருமான் வர்ணங்களை ஸ்ருஷ்டித்ததையும், அவ்வர்ண த4ர்மங்களால் ஆராதி4க்கப்படுபவனாயிருக்கையையும் காரணமாகக் கொண்டது என்று காட்டி அதற்கு ப்ரமாணோபந்யாஸம் செய்கிறாரே யொழிய, வரிக்கப்படுகிறவன் என்னும் பொருளை அருளிச்செய்யவில்லை என்பது காணத்தக்கது.]

---

"வருணமுமாயினை"—வர்ணமாதல்; வரிக்கப்படுகிறவனாதல்; இவற்றை அருளிச்செய்கிறார் (ஆத்மாக்களுக்கு) இத்யாதி3 வாக்ய த்3வயத்தாலே; இரண்டுக்கும் ப்ரமாணமருளிச்செய்கிறார் (அஹம் ஹி) இத்யாதி3.

## அறுபத முரலுங் கூந்தல் காரணம்
## ஏழ்விடை யடங்கச் செற்றனை

(மேதகுமைம்பெரும் பூசமும் நீயே) ஆத்மாக்களுடைய தே3ஹாரம்ப4கங்களான மஹாபூ4தங்களும் நீயே; (மேதகு) மேவித் தக்கிருக்கும். மேவுகையாவது - "தே3வோऽஹம் மநுஷ்யோऽஹம்" என்கிறபடியே பொருந்தியிருக்கை; அதாவது - யாதானுமோராக்கையில் புக்கு அங்கே தக்கிருக்கை; அதாவது - கர்மத்துக்கு அநுகூலமாயிருக்கை. இத்தால் - ஸத்தாதி3கள் நீ யிட்ட வழக்கானபின்பு உன்னையொழிய ரக்ஷகருண்டோ? என்கை.

கிறது; ஜக3த்3ஆரம்ப4கமான பூ4தபஞ்சகங்களும் நீயிட்ட வழக்கு; ஸத்தாதி3களும் உன்னதீ4நமானபின்பு உன்னையொழிய ரக்ஷகருண்டோ?

(மேதகும் ஐம்பெரும் பூதமும் நீயே) ஆத்மாக்கள் புக்குப் பொருந்தியிருக்கும் தே3ஹத்திற்கு உபாத3ாநமான மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐந்து மஹா பூ4தங்களும் நீயே; அதாவது நீயிட்ட வழக்கே என்று கருத்து. (மேதகு) மேவித்தக்கிருக்கை; புக்குப் பொருந்தியிருக்கை. அதாவது,— "யாதானும் ஓர் ஆக்கையில் புக்கு அங்கு ஆப்புண்டும்" [திருவிருத்தம் 95] என்கிறபடியே ஆத்மாக்கள், தே3வர் முதலான ஒவ்வொரு ஶரீரத்திலே புகுந்து, "தே3வோऽஹம் மநுஷ்யோऽஹம்" [நான் தே3வனாயிருக்கிறேன்; நான் மனிதனாயிருக்கிறேன்] என்று அநுஸந்தி4க்கலாம்படி அதனோடு பொருந்தி, அவ்வவற்றிற்குரிய கர்மத்தை அநுஷ்டி2க்கத்தகுதிபெற்றிருக்கை. "நால்வகை வருணமும் ஆயினை; ஐம்பெரும் பூ4தமும் நீயே" என்று— "எனது ஶரீரத்திற்கும், அதன் தன்மைகளுக்கும் ஸத்தா ஸ்தி2தி ப்ரவ்ருத்திகள் உன்னதீ4னமாயிருக்கும்போது உன்னைத் தவிர வேறு ரக்ஷகர் உண்டோ?" என்னும் கருத்தைக் காட்டுகிறார்.



அறுபதம் முரலும் கூந்தல் காரணம்— வண்டுகள் (மது4 பானத்திற்காக வந்து மொய்த்து) ரீங்காரம் செய்யப்பெற்ற கூந்தலையுடைய நப்பின்னைப் பிராட்டிக்காக, ஏழ் விடை— ஏழு எருதுகளையும், அடங்க செற்றனை —ஒன்றாக நெரித்தாய்;

(அறுபதமித்யாதி3) ஸாமாந்யரக்ஷணஞ்சொல்லி விஶேஷரக்ஷணஞ்சொல்லுகிறது. (அறுபதமுரலும் கூந்தல் காரணம்) வண்டுகள் தேனைப் பருகி முரலாநின்ற திருக்குழலையுடையளாகையாலே போ4க்3யபூ4தையான நப்பின்னைப்பிராட்டியின் பொருட்டு. (ஏழ்விடையடங்கச் செற்றனை) ஏழெருத்தையும் ஊனப்படாதபடி நெரித்தாய். இத்தால் - "நப்பின்னைப் பிராட்டியுடைய ஸம்ஶ்லேஷத்

(அறுபதமித்யாதி3) ஆறு காலையுடைத்தாய், மது4பாநார்த்த2மாகப் படிந்த வண்டுகள் மது4பாநமத்தமாய்க்கொண்டு ஆளத்திவையாநின்ற மயிர்முடியையுடைய நப்பின்னைப்பிராட்டியோட்டை ஸம்ஶ்லேஷத்துக்கு ப்ரதிப3ந்த4கமான ருஷப4ங்கள் ஏழையும்

அறிதுயிலமர்ந்து சிந்தித்தபடியே செய்த ரக்ஷணங்களில் அனைவர்க்கும் பொதுவான ரக்ஷணமான வர்ணபூ4த ஸ்ருஷ்டி ஸ்தி2தி முதலானவற்றை இதுவரையில் சொல்லி, அந்தரங்கை3யான நப்பின்னைப் பிராட்டியை ரக்ஷித்த ப்ரகாரமாகிற விஶேஷரக்ஷணத்தைச் சொல்லுகிறது,— (அறுபதமுரலும் கூந்தல் காரணம்) ஆறு கால்களை உடையனவாய், இவளுடைய கூந்தலில் வெள்ளமிடும் தேனைப் பருகுவதற்காக வந்து பொருந்திய வண்டுகள், மது4வைப் பருகியதால் மயக்கங்கொண்டு ரீங்காரம் செய்யப்பெற்ற திருக்குழலை உடையவளாகையாலே மிக இனியவளான நப்பின்னைப்பிராட்டியின் பொருட்டு; (ஏழ்விடை அடங்கச் செற்றனை) அவளைத் தழுவுவதற்குத் தடையாயிருந்த ஏழு எருதுகளையும் ஒன்று குறைவுபடாமல் கழுத்திலே நெரித்துக்கொன்றாய். இத்தால், "நப்பின்னைப் பிராட்டியை

" அடங்க "—(ஊனப்படாதபடி)—குறைபடாதபடி.

## அறுவகைச் சமயமு மறிவரு நிலையினை
## ஐம்பாலோதியை ஆகத் திருத்தினை

அறு வகை சமயமும்—ஆறுவகையான புறச்சமயங்களும். அறிவு அரு—அறிந்துகொள்ள இயலாத. நிலையினை—தன்மையை உடையவனு யிராநின்ருய்; ஐம்பால் ஓதியை—ஐந்து லக்ஷணங்களமைந்த கூந்தலையுடையளான பிராட்டியை. ஆகத்து இருத்தினை—திருமார்பிலே த4ரித்துக் கொண்டிரா நின்ருய்;

---

துக்கு விரோதி4களைப் போக்கினுற்போலே என்னுடைய விரோதி4களையும் போக்கித்தந்தருளவேணும்'' என்று கருத்து.

(அறுவகைச் சமயமும் அறிவருநிலையினை) அநாஶ்ரிதரான பா3ஹ்யருடைய நினைவுக்கு கோ3சரமல்லை.

---

ஊட்டியாக நெரித்தாய்; என்னுடைய ப்ரதிப3ந்த4கத்தையும் நீயே போக்கவேணும்.

(அறுவகை யித்யாதி3) ஆறுவகைப்பட்ட பா3ஹ்யஸமயங்களால் அறிய வொண்ணுத ஸ்வபா4வத்தை உடையையா யிருந்தாய்.

---

அடைவதற்குத் தடையாயிருந்தவற்றைப் போக்கினுற்போலே என்னை நீ அடைவதற்குத் தடையாயிருக்கும் பாபங்களையும் போக்கியருளவேணும்'' என்னும் கருத்தைக் காட்டுகிருர்.

(அறுவகைச் சமயமும் அறிவருநிலையினை) உன்னை ஒப்புக்கொள்ளாத சார்வாகர். பௌ3த்3த4ர். சமணர். நையாயிகவைஶேஷிகர் (தார்க்கிகர்). ஸாங்க்2யர், பாஶுபதர் என்னும் ஆறு மதங்களிலிருப்பவர்களாலும் அறியவும் இயலாத தன்மையை உடையவனுயிராநின்ருய். இத்தால் ''உன்னை அடையாதவர்களுக்கே அரியவனுயிருக்கும் நீ. உன்னை அடைந்த எனக்கும் அரியவனுவதே!'' என்னும் கருத்தை உணர்த்துகிருர்.



(ஐம்பாலோதியை ஆகத்திருத்தினை) ஐந்து லக்ஷணமுடைய திருக்குழற்கற்றையையுடைய பெரியபிராட்டியாரைத் திருமார்பிலே வைத்தாய். மேற்சொல்லப்படுகிற

---

(ஐம்பாலித்யாதி3) அஞ்சு லக்ஷணத்தையுடைத்தான மயிர்முடியையுடையளாய், "न कश्चिन्नापराध्यति" (ந கஶ்சிந்நாபராத்4யதி) என்னும் பெரிய பிராட்டியாரைத் திருமார்பிலே வைத்தருளினுய்.

---

(ஐம்பாலோதியை ஆகத்திருத்தினை) பெண்களுடைய கூந்தலுக்கு இருக்கவேண்டிய சுருண்டிருத்தல். நெய்த்து (பளபளப்பாய்) இருத்தல். மணம்மிக்கிருத்தல். அடர்ந்திருத்தல். மென்மையாயிருத்தல் என்னும் ஐந்து லக்ஷணங்களையுமுடைய திருக்குழல் கற்றையை உடையவளான பெரிய பிராட்டியாரைத் திருமார்பிலே வைத்தருளினுய். ஐந்து லக்ஷணங்களை வேறுவகையாகவும் கூறுவர். (ஆகத்து இருத்தினை)

''பாபாநாம் வா ஶுப4நாம் வா வத4ார்ஹாணும் ப்லவங்க3ம।
கார்யம் கருணமார்யேண ந கஶ்சிந் நாபராத்4யதி॥''

[ரா-யு 116-44]

[வானரனே! பாபிகளாயினும். புண்யசாலிகளாயினும். கொல்லத்தக்கவரேயாயினும் அவர்கள் விஷயத்திலும் நல்லோனுயிருப்பவனுல் கருணை காட்டப்படவேண்டும். (இவ்வுலகில்) குற்றம் செய்யாதவன் எவனுமில்லையே.] என்று திருவடிக்கு உபதே3ஶித்தவள் எப்போதும் அடியார்க்காகப் புருஷகாரம் செய்யலாம்படி திருமார்பிலேயே அவளை இருத்திக்கொண்டாய், ''மங்கையரிருவரும் வருட'' என்றவிடத்தில் ஸ்ரீபூ4மிதே3விகள் இருவரையும் புருஷகாரமாக அநுஸந்தி4த்தபோதிலும். மார்பிலேயே இருத்திக்கொண்டிருக்கும் ஸ்ரீதே3வியின் ப்ராத4ாந்யம் இங்கு சொல்லப்படு

---

(ஐந்து லக்ஷணம்)—மென்மை, குளிர்த்தி, நாற்றம், நெடுமை, கறுப்பு ஆக ஐந்துவகைப்பட்ட மயிர்முடி.

**அறமுதல் நான்கவையாய் மூர்த்தி மூன்றாய்**
**இருவகைப் பயனு யொன்றாய் விரிந்து நின்றனை.**

அறம் முதல் நான்கு அவை ஆய்-அறம் பொருள் இன்பம் வீடு எனும் நான்கு புருஷார்த்த2ங்களையும் கொடுப்பவனாய்,

---

ஐஶ்வர்யஸௌந்த4ர்(ஸௌலப்4?)யங்களுக்கு அடியான ஶ்ரிய:பதித்வம் சொல்லப்படுகிறது.

( அறமுதல் நான்கவையாய் ) த4ர்மாதி3 ஸகல புருஷார்த்த2 ப்ரத3னுமாய். ( மூர்த்தி மூன்றாய் )

---

மேற்சொல்லப்படுகிற ஐஶ்வர்ய ஸௌலப்4யங்களுக்கு நிப3ந்த4நமாக ஶ்ரிய:பதித்வம் சொல்லிற்று.

---

கிறதாகையாலே புநருக்தியில்லை. அன்றிக்கே. மேலே சொல்லப்படுகிற ஐஶ்வர்ய (பரத்வ) ஸௌலப்4யங்களும், அழகும் இவனுக்கு இவளாலேயே ஏற்படுகின்றன என்று காட்டுவதற்காகச் சொல்லுவதாகவும் கொள்ளலாம்.

அதில் ஐஶ்வர்யத்தைக் காட்டுகிறது முதலில்.— ( அறம் முதல் நான்கவையாய்) அறம், பொருள், இன்பம், வீடு எனப்படும் நான்கு புருஷார்த்த2ங்களாகவும் ஆகின்றவனாய்;

"சதுர்ணாம் புருஷார்த்த2ாநாம் தா3தா தே3வ: சதுர்பு4ஜ:"
[சதுர்பு4ஜனான நாராயணன் நாலு புருஷார்த்த2ங்களையும் அளிப்பவன்]

"தே3வேந்த்3ரஸ் த்ரிபு4வநம் அர்த்த2மேகபிங்க3:
ஸர்வர்த்3தி4ம் த்ரிபு4வநகா3ம் ச கார்த்தவீர்ய: ।
வைதே3ஹ: பரமபத3ம் ப்ரஸாத்3ய விஷ்ணும்
ஸம்ப்ராப்த: ஸகலப2ல ப்ரதே3ா ஹி விஷ்ணு: ॥"
[விஷ்ணுத4ர்மம் 43-47]

[விஷ்ணுவை ஆராதி4த்து தே3வேந்திரன் மூவுலகங்களையும், குபே3ரன் செல்வத்தையும், கார்த்த வீர்யன் மூவுலகங்களிலும் பரவிய எல்லாப் பெருமைகளையும், ஜநகமஹாராஜன் பரமபத3த்தையும் அடைந்தனர்; விஷ்ணுப4க3வான் வேண்டிற்றெல்லாம் தரும் வள்ளலன்றோ.] என்கிறபடியே நாலு புருஷார்த்த2ங்களையும் அளிக்கவல்லவன் இவனே யாகையால், 'நாலு புருஷார்த்த2ங்களும் இவனே' என்கிறார்.



மூன்று மூர்த்தி ஆய்-மும்மூர்த்திகளுக்கு அந்தர்யாமியாய், இருவகை பயன் ஆய்— ஸுக2 து3:க்க2ங்களிரண்டையும் விளைப்பவனாய். ஒன்று ஆய் விரிந்து நின்றனை —(முதலில்) தான் ஒருவனாயிருந்து (பிறகு) உலகம் முழுவதாகவும் விரிவுபெற்று நின்றாய்;

---

ப்3ரஹ்மருத்3ராதி3களுக்கு நிர்வாஹகனாய். (இருவகைப் பயனாய்) ஸுக2து3:க்க2ங்களிரண்டுக்கும் நிர்வாஹகனாய்.

---

( அறமுதலித்யாதி3 ) த4ர்மார்த்த2காம மோக்ஷங்களாகிற புருஷார்த்த2 சதுஷ்டயங்களுமாய், ப்3ரஹ்மருத்3ராதி3களுக்கு நடுவே ஸ்வரூபேண நின்று, அவர்களை ஶரீரமாகக் கொண்டுநின்று "ब्रह्मविष्णुशिवात्मिकाम्। स संज्ञां याति भगवान् एक एव जनार्दनः॥" (ப்3ரஹ்மவிஷ்ணு ஶிவாத்மிகாம்। ஸ ஸம்ஜ்ஞாம் யாதி ப4க3வாந் ஏக ஏவ ஜநார்த்த3ந: ॥) என்னலாம்படி நிற்பானாய், ஸுக2 து3:க்க2ங்களுக்கு நியாமகனாய், காரணாவஸ்தை2யில் ஸச்ச2ப்3த3

---

( மூர்த்தி மூன்றாய் ) ப்3ரஹ்மருத்3ரேந்த்3ரர்கள் எனப்படும் மூன்று மூர்த்திகளுக்கு அந்தர்யாமியாய். அன்றிக்கே, ப்3ரஹ்ம விஷ்ணு ருத்3ரர் எனப்படும் மும்மூர்த்திகளைச் சொல்லுகிறதாகில், ப்3ரஹ்மருத்3ரர்களுக்கு நடுவே படி2க்கப்படும் விஷ்ணுவாகத் தானே நின்று ரக்ஷணத்தைச் செய்பவனாய். ப்3ரஹ்மருத்3ரர்களுக்கு அந்தர்யாமியாயிருந்து ஶரீரமான அவர்களைக்கொண்டு ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைச் செய்பவனாயிருக்கும்படியைச் சொல்லுகிறது.

"ஸ்ருஷ்டிஸ்தி2த்யந்தகரணீம் ப்3ரஹ்மவிஷ்ணு ஶிவாத்மிகாம் ।
ஸ ஸம்ஜ்ஞாம் யாதி ப4க3வாந் ஏக ஏவ ஜநார்த்த3ந: ॥"
[வி-பு 1-2-66]

[ஸ்ருஷ்டி, ரக்ஷணம், ஸம்ஹாரம் என்னும் முத்தொழில்களையும் செய்வதற்காக, பிரமன், விஷ்ணு, சிவன் என்னும் மூன்று பெயர்களையும் (அப்பெயர்களையுடைய உருவங்களையும்) ஜநார்த்த3னன் ஒருவனே அடைகிறான்] என்று ஸ்ரீபராஶரரால் சொல்லப்பட்டதன்றோ. (இருவகைப்பயனாய்)

**குன்று மதுமலர்ச் சோலை வண்கொடிப் படப்பை**
**வருபுனல் பொன்னி மாமணி யலைக்கும்**
**செந்நெலொண் கழனித் திகழ்வன முடுத்த**

---

(ஒன்றாய் விரிந்து நின்றனை) ஸர்வமும் ஸ்வப்ரகாரமாக இருக்கச்செய்தே, அவற்றோடு ஒட்டற்று நின்றாய். இத்தால் ஐச்வர்யஞ்சொல்லிற்று.

---

வாச்யனாய், ஸ்ருஷ்டிகாலத்திலே வந்தவாறே "बहु स्याम्" (பஹு$_3$ ஸ்யாம்) என்கிறபடியாய் விஸ்த்ருதனாய் நிற்கிறாயும் நீ.

---

ஸுக$_2$ம், து$_3$:க்க$_2$ம் எனப்படும் இருவகைப்பட்ட கர்மப$_2$லன்களுக்கும் நிர்வாஹகனாய். (ஒன்றாய் விரிந்து நின்றனை) ப்ரளயகாலத்தில் உலகிலுள்ள எல்லாப்பொருள்களும் நாமரூபப்பிரிவற்று தன்னோடு ஒடுங்கியிருக்கையாலே. "ஸதே$_3$வ" [சாந் 6-2-1] என்கிற ஶ்ருதியிற்சொன்னபடி தான் ஒருவனேயாயிருப்பவனாய், ஸ்ருஷ்டி காலத்தில் "ப$_3$ஹு ஸ்யாம்" [சாந் 6-2-3][நான் பலவாக ஆகக்கடவேன்] என்று ஸங்கல்பித்தபின்பு நாமரூபப்பிரிவுகளை அடைந்த பல பொருள்களாய் விரிவுபெற்று நின்றாய். இப்படி ஸ்ருஷ்டிப்ரளய காலங்களைச் சொல்லாமல், எல்லாக் காலத்திலும் எல்லாப் பொருள்களும் தனக்கு ப்ரகாரமாயிருக்கையாலே, "சேதநாசேதநங்களை ஶரீரமாகக்கொண்ட திருமால் ஒருவனே தத்வம் (உண்மைப் பொருள்)" என்னலாம்படியிருப்பவனாய். இப்படி அவற்றை ஶரீரமாகக் கொண்டிருந்தபோதிலும், அவற்றின் தோ$_3$ஷம் தன்மேல் ஒட்டாதபடி வேறுபட்டு நின்றமையைக் கூறுவதாகவும் கொள்ளலாம். "அறமுதல்" என்று தொடங்கி இதுவரையில் இவனுடைய ஐஶ்வர்யம் (பரத்வம்) சொல்லப்பட்டதாயிற்று. இத்தால் "என்னுடைய பயனை எனக்கு ஸாதி$_4$த்துத்தரவல்ல ஐஶ்வர்யம் உனக்கு இல்லாமையால் நான் இழக்க இடமில்லை" என்னும் கருத்தைத் தெரிவித்தாராயிற்று.



**கற்போர் புரிசை கனக மாளிகை**
**நிமிர்கொடி விசும்பில் இளம்பிறை துவக்கும்**
**செல்வம் மல்குதென் திருக்குடந்தை**
**அந்தணர் மந்திர மொழியுடன் வணங்க**
**ஆடர வமளியி லறிதுயில் அமர்ந்த பரம**
**நின்னடி யிணை பணிவன்**
**வருமிட ரகல மாற்றோ வினையே.**

திருவெழுகூற்றிருக்கை நிறைவுற்றது.
திருமங்கையாழ்வார் திருவடிகளே ஶரணம்.

குன்றா மது—குறையாத தேனையுடைய. மலர் சோலை—பூக்கள் நிறைந்த சோலைகளையுடையதும். வண் கொடி படப்பை—அழகிய கொடிகளையுடைய தோட்டங்களையுடையதும். வரு புனல்—எப்போதும் பெருகுகின்ற நீரையுடைய, பொன்னி—காவேரியானது மா மணி—சிறந்த ரத்னங்களை, அலைக்கும்—அலையெறிந்து கொழிக்கப்பெற்றதும். செந்நெல் ஒண் கழனி—செந்நெற் பயிர்களாலே அழகிய வயல்களை உடையதும். திகழ் வனம் உடுத்த—விளங்குகின்ற வனங்களை நாற்புறங்களிலுமுடையதும். கற்போர் புரிசை—வித்$_3$வான்கள் வாழும் நகரமாயிருப்பதும். கனகம் மாளிகை நிமிர்—பொன்மயமான மாளிகைகளினின்றும் மேல்முகமாய் ஓங்குகின்ற. கொடி — த்$_4$வஜங்களானவை. விசும்பில்—ஆகாயத்திலுள்ள. இள பிறை—பா$_3$லசந்திரனை. துவக்கும்—ஸ்பர்சிக்கப்பெற்றதும். செல்வம் மல்கு—செல்வம் நிறைந்ததுமான. தென் திரு குடந்தை—அழகிய திருக் குடந்தையிலே. அந்தணர்—பிராம்மணர்கள். மந்திரம் மொழியுடன் வணங்க—வேத ஸூக்தங்களைச் சொல்லிக்கொண்டு வணங்கும்படியாக. ஆடு அரவு அமளியில்—படமெடுத்தாடுகிற ஆதி$_3$ஶேஷனாகிற ஶயனத்தில். அறி துயில் அமர்ந்த—யோக$_3$ நித்திரை செய்வதில் ஈடுபட்ட, பரம—ஸர்வேஶ்வரனே!. வரும் இடர் அகல—உன்னை அடைவதற்கு நேரக்கூடிய தடைகள் நீங்க, நின் அடி இணை பணிவன்—உன்னுடைய இரு திருவடிகளை ஆஶ்ரயிக்கின்றேன்; வினை—அத்தடைகளை, மாற்று—போக்கியருளவேணும்.

(குன்று மதுமலர்) என்று மேலுக்கு நீர்மைக்கு எல்லையான விடத்திலே ஶரணம் புகுகிறார். (குன்று மது மலர்ச் சோலை) குன்றுத மது$_4$வெள்ளத்தை உடைத்தான பூஞ்சோலை. ஆராவமுதாழ்வாருடைய கடாக்ஷமாகிற அமுத வெள்ளத்தாலே வளருகிற சோலையாகையாலே நித்யவஸந்தமாய்ச் செல்லுகிறது. (வண்கொடிப்படப்பை) அழகிய கொடிக்கால்களையும் நீர்நிலத்தையுமுடைய. (வருபுனல்

(குன்றுவித்யாதி$_3$) குன்றுத மது$_4$வையும் மலரையுமுடைத்தான சோலையையுமுடைத்தாய், அழகிய கொடிகளையுடைத்தான தோட்டங்களையுமுடைத்தாய், மாருத ஜல ஸம்ருத்$_3$தி$_4$யையுடைத்

இனி, "கிடந்தவாறு எழுந்திருந்து பேசு" [திருச்சந்த 61] என்று அடியார் நியமித்தால், அப்படியே செய்கின்றவனுகையாலே, நீர்மைக்கு (ஸௌலப்$_4$யத்துக்கு) எல்லை நிலமாய், அழகுக்கு ஓர் உறைவிடமான ஆராவமுதாழ்வாரை நம்மாழ்வார் சரணடைந்ததுபோலே ஶரணமடைகிறார்.— (குன்று மது மலர்ச்சோலை) குறையாத தேன்வெள்ளத்தையும், அவற்றைப் பெருகவிடும் மலர்களையும் உடையதான சோலைகளை உடையதாய். எருவும், நீருமிட்டு வளரும் சோலையானுல் மதுமலர்கள் குன்றக்கூடும்; ஆராவமுதாழ்வாருடைய கடாக்ஷமாகிற அமுத வெள்ளத்தாலே வளருகிற சோலையாகையாலே நித்ய வஸந்தமாய்ப் பெருகுகிறது. (வண்கொடிப் படப்பை) அழகிய கொடிக்கால்களை (அல்லது கொடிகளை) உடைய நீர்நிலங்களை (அல்லது தோட்டங்களை) உடையதாய். படப்பை என்று பலவகைக் கொடிகளையுடைய தோட்டங்களையோ, வெற்றிலைக்கொடிக்கால்களையுடைய நீர்நிலங்களையோ சொல்லுகிறது. 'வண்' என்று செழுமையையும், அதனுல் வரும் அழகையும் காட்டுகிறது. (வருபுனல்

" வண்கொடி "—வெற்றிலைக்கொடி. " படப்பை "—வெற்றிலைத் தோட்டம்.



பொன்னி மாமணியலைக்கும் செந்நெலொண் கழனித்திகழ் வனமுடுத்த) பெருகி வாராநின்ற திருப்பொன்னி மஹார்க$_4$மான ரத்நங்களைக் கொழித்தேற வருகிற. இத்தால் விளைகிற செந்நெல்லையும் உடைத்தாகையாலே அழகிய கழனியையுமுடைத்தாய். விளங்காநின்ற அழகிய வநங்களாலும் சூழப்பட்ட. (கற்போர் புரிசை) வித்$_3$வான்கள் படுகாடு

தான பொன்னி பாய்ந்து ரத்நங்களைக்கொழித்து ஏறிடாநிற்பதாய், அழகிய செந்நெல்லையுடைத்தான கழனிகளையுடைத்தாய்த் திகழாநின்றுள்ள வநத்தைச் சுற்றிலேயுடைத்தாய், தொழிலோரப்படா

பொன்னி மாமணி அலைக்கும்) பெருகிவருகின்ற நீர்ப்பெருக்கையுடைய காவிரி சிறந்த ரத்னங்களைக் கொழித்துச் சேர்க்கப்பெற்றதாய். "சஞ்சச்சாமர சந்த்$_3$ர சந்த$_3$ந மஹாமாணிக்ய முக்தோத்கராந் காவேரீ லஹரீகரைர் வித$_3$த$_4$தீ" [ர-ஸ்த 1-21] [விளங்காநிற்கும் சாமரங்கள், பச்சைக் கருப்பூரம், சந்த$_3$னம், சிறந்த ரத்னங்கள், முத்துக்கள் ஆகியவற்றின் குவியல்களை அலைகளாகிற கைகளினுல் ஏந்திவருகின்ற காவேரி] "ஆளரியால் அலைப்புண்ட யானை மருப்பும் அகிலும் அணிமுத்தும் வெண்சாமரையோடு பொன்னி மலைப்பண்டம் மண்டத் திரையுந்து" (பெரியதிரு 3-8-3) "சந்திஞேடு மணியும் கொழிக்கும் புனல்காவிரி" (பெரியதிரு 5-4-1) "வேயின் முத்தும் மணியும் கொணர்ந்து ஆர் புனற் காவிரி" (பெரியதிரு 5-4-9) "திசைவில்வீசும் செழுமாமணிகள் சேரும் திருக் குடந்தை" (திருவாய் 5-8-9) என்கிறபடியே தலைசிறந்த ரத்னங்களைக் காவிரி தன் கரையிலே கொழித்துச் சேர்ப்பதாகப் பாசுரமிட்டனரன்றே. (செந்நெல் ஒண் கழனி) இக்காவிரியாலே செழித்து வளர்கின்ற செந்நெற்களை உடைத்தாயிருக்கையாலே அழகாயிருக்கும் வயல்களை உடையதாய். (திகழ் வனம் உடுத்த) நீர்ப்பெருக்காலே செழித்துத்திகழும் வனங்களாலும் சூழப்பட்டதாய். (கற்போர் புரிசை) "திசைவில் வீசும் செழுமாமணிகள்" (திருவாய் 5-8-9) என்றவிடத்தில் உணர்த்தப்

கிடக்கும் நக3ரி. (கனகமாளிகை) பொன்னாலே செய்யப்பட்ட மாளிகை. (நிமிர்கொடி விசும்பில் இளம்பிறை துவக்கும்) அதில் நிமிராநின்றுள்ள கொடிகள் சந்த்3ரனைச் சென்று துவக்கும். (செல்வம் மல்கு தென் திருக்குடந்தை) நிரதிஶயமான ஸம்பத்தையும் போ4க்3யதையையுமுடைய திருக்குடந்தையிலே. (அந்தணர் மந்திரமொழியுடன்

---

நின்றுள்ள மதிளையுமுடைத்தாய், பொன்னாலே செய்யப்பட்ட மாளிகையில் நட்ட கொடிகளானவை ஆகாஶத்திலே ஸஞ்சரிக்கிற சந்த்3ரனைத் துவக்கினாலும் சுற்றிடாநிற்பதாய், நிரவதி4க ஸம்பத்தையும் போ4க்4யதையையுமுடைத்தான திருக்குடந்தையிலே ப்3ராஹ்மணர் வேத3ாந்த ஸூக்தங்களைக்கொண்டு ஆஶ்ரயிக்க.

---

பெற்ற திக்கெட்டும் பரவிய புகழையுடைய திருமழிசை யாழ்வார் போல்வாரான பேரறிவாளர்கள் நித்யவாஸம் செய்யும் நகரியாயிருப்பதாய். 'புரிசை' என்று புரியைச் சொல்லுகிறது. 'புரிசெய்' என்று பாடம் கொண்டு 'புரி (நக3ரி)யாக செய்யப்பெற்றதாய்' என்று தீ3பிகையுரையில் பொருள் கொள்ளப்பட்டது. அன்றிக்கே, 'புரிசை' என்று மதிளாய் 'கற்பு ஓர் புரிசை' என்று 'நல்ல தொழில் நயம் (வேலைப்பாடு) பொருந்திய திருமதிள்களை உடையதாய்' என்கிறதாகவுமாம். (கனகமாளிகை) பொன்னாலே செய்யப்பெற்ற மாளிகைகளிலே (நிமிர்கொடி விசும்பில் இளம்பிறை துவக்கும்) நடப்பெற்று உயர்ந்து விளங்கும் கொடிகள் (த்4வஜங்கள்) ஆகாயத்தில் இளம்பிறையைச் சென்று தனதுபடத்தாலே ஸ்பர்ஶிக்கும். மாளிகைகளின் உயர்வைக் காட்டும் அதிஶயோக்தி. துவக்கும் என்று கொடிப்படமாகிற த்வக்கினாலே (தோலினாலே) சுற்றிலும் ஸ்பர்ஶிக்கையைச் சொல்லுகிறதாகவும் தடை செய்கையைச் சொல்லுகிறதாகவும் இருவகையாகப் பொருள் கூறலாம். (செல்வம் மல்கு தென் திருக்குடந்தை) தலைசிறந்த செல்வத்தையும், இனிமையையும் உடைய திருக்குடந்தையிலே. 'செல்வம் மல்கு' என்று செல்வச்சிறப்பையும், 'தென்' என்று இனிமையையும் சொல்லுகிறது. (அந்தணர் மந்திர மொழியுடன் வணங்க)

---

" நிமிர்கொடி " கொடிகள்—த்4வஜங்கள்.



வணங்க) அநந்யப்ரயோஜநரான ப்3ராஹ்மணர் ரஹஸ்யமான ஸூக்தங்களைக்கொண்டு ஆஶ்ரயிக்க. (ஆடரவமளியில் அறிதுயிலமர்ந்த பரம) தன்னுடைய ஸ்பர்ஶத்தாலே விரிக்கப்பட்ட ப2ணங்களையுடைய திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே ஜக3த்3 ரக்ஷணத்துக்காக உணர்ந்துகொண்டு கண்வளர்ந்தருளுகையாலே ஸர்வேஶ்வரனானவனே! (ஆடரவு) திருவநந்தாழ்வானுடைய உச்ச்2வாஸநிஶ்வாஸங்களாலே தூங்குதொட்டிலைப் போலே என்னவுமாம்.

(நின்னடியிணை பணிவன் வருமிடர் அகல மாற்றோ வினையே) உன்னுடைய திருவடிகளிலே ஶரணம் புகுந்தேன்.

---

உன்னோட்டை ஸ்பர்ஶத்தாலே விகஸிதமான ப2ணங்களையுடைய திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே ஜக3த்3ரக்ஷணத்திலே அவஹிதனாய்க்கொண்டு கண்வளர்ந்தருளுகிற ஸர்வாதி4கனே!

(நின்னடியிணை யித்யாதி3) என்னுடைய ஸ்வரூபாநுரூபமாக தே3வரீர் திருவடிகளிலே ஶரணம்புகுந்தேன். நீயும் உன்னுடைய

---

உன்னையே பயனாகக்கொண்டவர்களாய் வேத3ம் வல்லவரான அந்தணர். "மந்த்ரம் யத்நேந கோ3பயேத்" [மந்திரத்தை முயன்று மறைத்துவைக்கவேண்டும்.] என்கிறபடியே அநதி4காரிகள் செவிப்படாதபடி ரஹஸ்யமாகப் பேணிப் பாதுகாக்கப்படும் வேத3ாந்த ஸூக்தங்களைக்கொண்டு ஆஶ்ரயிக்க. [பெரியவாச்சான்பிள்ளையின் இரண்டாவது வ்யாக்2யானத்தின் பழைய பதிப்பில் "வேத3ாந்த ஸூத்ரங்களைக்கொண்டு" என்று இருப்பது பிழையான பாட2ம்] (ஆடரவமளியில் அறிதுயில் அமர்ந்த பரம) எம்பெருமானுடைய திருமேனி ஸ்பர்ஶத்தாலே விரிக்கப்பட்ட படங்களையுடைய திருவனந்தாழ்வானாகிற படுக்கையில், லோக ரக்ஷணத்தைச் சிந்தித்துக்கொண்டே கண்வளர்ந்தருளுகையாலே, 'நீயே ஸர்வேஶ்வரன்' என்பது தோற்றும்படி இருப்பவனே! (ஆடரவு) படம் எடுத்து ஆடும் அரவு. திருவனந்தாழ்வான் மூச்சை உள்ளே இழுத்து வெளிவிடுகையாலே, 'தூங்கு தொட்டிலைப்போலே விரிந்துசுருங்கும் ஆதி3ஶேஷன்' என்றும் பொருள் கொள்ளலாம்.

(நின் அடியிணை பணிவன்) உன்னுடைய திருவடிகளிலே ஶரணம் புகுந்தேன். நீயே கைவிட்டாலும் என்னைக்

இத்தை அநுப₄விக்கைக்கு விரோதி₄யைப் போக்கியருள வேணும். இத்தால்—இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்துக்கும் ஸித்₃த₄மான உபாயத்தைப் பற்றிவிடுகிறுர்.

பெரியவாச்சான்பிள்ளை அருளிய
திருவெழுகூற்றிருக்கை வ்யாக்₂யானம் முற்றிற்று.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

---

ஸ்வரூபாநுரூபமாக என்னுடைய ஸாம்ஸாரிக வருத்தத்தைக் கழித்துத்தரவேணும் என்கிறுர்.

மெனக்கிட்ட ஸ்ரீ வைஷ்ணவருக்குப் பெரியவாச்சான்பிள்ளை
அருளிச்செய்த திருவெழுகூற்றிருக்கை வ்யாக்₂யானம் முற்றிற்று.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

---

கைவிடாத உன் திருவடிகளையே உபாயமாக உறுதி பூண்டேன் என்றபடி. (வரும் இடர் அகல) உன்திருவடிகளையும், ஸ்வரூபரூபகு₃ணங்களையும் அநுப₄விப்பதற்குத் தடையாக இவ்வுலகிலே ஏற்படும் விரோதி₄கள் நீங்கும்படியாக. ( மாற்ருே வினையே ) ஸம்ஸார ஸம்ப₃ந்த₄மாகிற மஹா பாபத்தைப் போக்கியருளவேணும். ( அடியிணை பணிவன்—மாற்ருே வினை ) அடியேன் என்னுடைய ஸ்வரூபாநுரூபமாக தே₃வரீரை உபாயமாகப் பற்றினேன். தே₃வரீரும் உமது ஸ்வரூபாநுரூபமாக என்னுடைய ஸம்ஸாரஸம்ப₃ந்த₄த்தினுல் ஏற்படும் வருத்தத்தைக் கழித்து உமது திருவடியைத் தர வேணும் என்று "தரியேன் இனி உன் சரணம் தந்து என் சன்மம் களையாயே" [ திருவாய் 5 8-7 ] என்ற நம்மாழ்வாரைப் போலே, அநிஷ்டநிவ்ருத்திக்கும் இஷ்டப்ராப்திக்கும் ஸித்₃த₄மான உபாயமான அவனையே பற்றிவிடுகிறுர்.

ஸ்ரீவைஷ்ணவ ஸுத₃ர்ஶந பத்ராதி₄பனுன ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தா₃ஸன்
இயற்றிய தி₃வ்யப்ரப₃ந்த₄ஸாரத்தில்
திருவெழுகூற்றிருக்கை வ்யாக்₂யானம் நிறைவுபெற்றது.

---

"மாற்ருே வினையே"—என்னை விட்டகலும்படி மாற்று. ஓர் இடரகல அடியிணை பணிவன், என்னை ஸம்ஸாரத்தில் நின்றும் மாற்று என்னவுமாம்.

அரும்பதவுரை முற்றிற்று.



## கம்பர் இயற்றிய சாற்றுப் பாடல்

இடங்கொண்ட நெஞ்சத் திணங்கிக்கிடப்பன, என்றும்பொன்னித்
தடங்கொண்ட தாமரை சூழும் மலர்ந்த தண் பூங்குடந்தை,
விடங்கொண்ட வெண்பல் கருந்துத்தி செங்கட் டழலுமிழ்வாய்,
படங்கொண்ட பாம்பணைப் பள்ளிகொண்டான் திருப்பாதங்களே.

பொன்னி—காவேரியாலும், தாமரை கொண்ட தடம்—தாமரைகளை உடைய குளங்களாலும், சூழும்—சூழப் பெற்றதாய், மலர்ந்த—மலர்ந்திருக்கும், தண்—குளிர்ந்த, பூ—பூக்கள் நிரம்பியதான, குடந்தை—திருக்குடந்தையிலே—, விடம் கொண்ட—விஷத்தையுடைய, வெண்பல்—வெளுத்த பற்களையும், கரும் துத்தி—கறுத்த ( படப் ) புள்ளிகளையும், செம் கண்—சிவந்த கண்களையும், தழல் உமிழ் வாய்—தீயை உமிழும் வாய்களையும் உடைய, படம் கொண்ட பாம்பு அணை—படம் எடுத்து ஆடும் திருவனந்தாழ்வானுகிற படுக்கையின் மீது, பள்ளிகொண்டான்—ஶயனித்திருக்கும்ஆராவமுதாழ்வாருடைய, திரு பாதங்களே-அழகிய திருவடிகளே, இடம் கொண்ட—விஶாலமான இடம் உடைய, நெஞ்சத்து-( திருமங்கையாழ்வாரின் )நெஞ்சிலே என்றும் இணங்கி கிடப்பன-எப்போதும் பொருந்தியிருக்கின்றன.

அவதாரிகை:— கம்பர் பாட்லாக வழங்கப்படும் இப்பாடல் திருவெழுகூற்றிருக்கையின் கடைசியில் அநுஸந்தி₄க்கப்படுகிறது. திருமங்கையாழ்வாரின் பெருமையைக் கம்பநாட்டாழ்வார் இதில் விவரிக்கிறுர்.

வ்யா:— (பொன்னி—தாமரை கொண்ட தடம் சூழும்) காவேரியாலும், தாமரைகளை உடைய குளங்களாலும் சூழப்பெற்றதாய். ( தண் பூங்குடந்தை ) குளிர்ந்த பூக்கள் நிரம்பியதான திருக்குடந்தையிலே. 'பள்ளிகொண்டான்' என்பதோடு கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும். எந்தப் படுக்கையிலே பள்ளிகொண்டான் என்பதை விவரிக்கிறது.—( விடங்கொண்ட....பாம்பணை ) என்று. (விடம் கொண்ட வெண்பல்) அஸுரராக்ஷஸர்களைக் கடிப்பதற்காக

விஷம் நிரம்பிய வெளுத்த பற்களை உடையவனாய். (கரும் துத்தி) கறுத்த படப்புள்ளிகளை உடையவனாய். (செம் கண்) அஸ்தூாநே பூயஸங்கையாலே எப்போதும் சிவந்திருக்கும் திருக்கண்களை உடையவனாய். (தழல் உமிழ் வாய்) "ஆங்காரவாரம் அதுகேட்டு அழல் உமிழும் பூங்கார் அரவணை" [நான்-திருவ 10] என்கிறபடியே அஸ்தூாநே பூயஸங்கையாலே தீயைக் கக்கும் வாய்களை உடையவனாய். (படம் கொண்ட பாம்பணைப் பள்ளிகொண்டான்) "ஆடரவு அமளியில் அறிதுயில் அமர்ந்த பரம" என்று திருமங்கையாழ்வார் திருவெழுகூற்றிருக்கையில் அருளியபடியே படமெடுத்து ஆடுமவனான திருவனந்தாழ்வானாகிற படுக்கையின்மீது பள்ளிக்கொண்டிருக்கும் ஆராவமுதாழ்வாருடைய. "வெண்பல்' என்று தொடங்கி இதுவரையில், திருவனந்தாழ்வானின் பற்களின் வெளுப்பும், துத்தியின் கறுப்பும், கண்களின் சிவப்பும், வாயிலிருந்து உமிழும் தழல்நிறமும், படத்தின் வெளுப்பும், ஆராவமுதனின் திருமேனி நீலமும் கலந்திருக்கும் பரபாகரஸத்தை (வர்ணச்சேர்த்தியழகை) அநுபவிக்கிறார். (திருப்பாதங்களே) அழகிய இரு திருவடிகளே. (இடம் கொண்ட நெஞ்சத்து என்றும் இணங்கிக் கிடப்பன) "வெள்ளத்தான் வேங்கடத்தானேலும் கலிகன்றி உள்ளத்தினுள்ளே உளன்" [பெரியதிரு 11-5-10] என்று திருமங்கையாழ்வாரே அருளிச்செய்தபடி, திருப்பாற்கடலையும், திருவேங்கடமலையையுங்காட்டிலும் விசாலமான இடம் உடையதாக எம்பெருமானாலே அபிமானிக்கப்படும் திருமங்கையாழ்வாருடைய ஹ்ருதயத்தின் ஒரு பகுதியிலே எப்போதும் பொருந்தியிருக்கின்றன. "விஸ்வஸ்ய ஆயதநம் மஹத்" [நாராயண-ஸூ] [ஸர்வேஸ்வரனுடைய பெருங்கோயிலாயிருப்பது ஹ்ருதயம்] "நெஞ்சமே நீள்நகராக இருந்த என் தஞ்சனே!" [திருவாய் 3-8-2] என்று உபயவேதங்களிலும் அடியாரது உள்ளம் பெருங்கோயிலாகவும், நீள்நகராகவும் பேசப்படுகிறதன்றோ.

கம்பர் இயற்றிய சாற்றுப் பாடலின் விரிவுரை
நிறைவுபெற்றது.

## ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடுக

(ஸுதர்ஶன பத்ரிகையில் வெளிவந்த எளியநடை நூல்கள்)

| | | |
|---|---|---|
| 1. | திருப்பாவை வ்யாக்யானம் | 4-00 |
| 2. | (போதாயந) ஸந்த்யாவந்தநம் பதவுரையுடன் | 0-35 |
| 3. | (போதாயந) உபாகர்மவிதி | 0-35 |
| 4. | புருஷஸூக்த வ்யாக்யானம் | 0-75 |
| 5. | நாராயண ஸூக்த வ்யாக்யானம் | 0-75 |
| 6. | ஸ்ரீஸூக்த வ்யாக்யானம் | 2-00 |
| 7. | பூ நீளா விஷ்ணுஸூக்த வ்யாக்யானங்கள் | 1-75 |
| 8. | தேஹளீஶ ஸுப்ரபாதம் | 0-25 |
| 9. | ராமாநுஜதேசிக ஸ்தோத்ரங்கள் | 1-00 |
| 10. | விசிஷ்டாத்வைதவிஜயம் (முதல் பாகம்) | 10-00 1 |
| | ஷை இரண்டாம் பாகம் | 5-00 |
| 11. | சாதிமத ஆராய்ச்சி | 2-00 |
| 12. | ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹஸ்தவம் | 0-37 |
| 13. | ஸந்மதகாரிகாவளீ | 1-75 |
| 14. | விஷ்ணுசித்தவிஜயம் முதல் பாகம் | 5-00 1 |
| | ஷை இரண்டாம் பாகம் | 7-00 1 |
| 15. | கம்பனின் சமயம் முதல் பாகம் | 1-00 |
| 16. | சாரீரககாரிகாவளீ (முதல் பாகம்) | 3-00 |
| 17. | பெரியாழ்வார் ப்ரபாவம் | 4-00 |
| 18. | ஸாத்விகவிஜய ஸர்வஸ்வம் (தபால் உள்பட) 50பை | |
| 19. | ஸந்த்₄யாவந்த₃நபா₄ஷ்யம் | 3-00 |
| 20. | திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 1-50 |
| 21. | மகரநெடுங்குழைக்காதர் பாமாலையந்தாதி | 1-50 |
| 22. | ஸ்ரீகேசவமணிமாலை | 0-75 |
| 23. | மாமுனிகள் அறுநூருவது ஆண்டு மலர் | 1-50 |
| 24. | சங்கரரும் வைணவமும் (தபால் வகைக்கூலி) 50பை | |
| 25. | ஸித்₃தே₄பாய விஜயம் | 3-00 |
| 26. | திருப்பாவை, திருப்பள்ளியெழுச்சி (மூலம் மட்டும்) | 0-20 |

---

ஸ்ரீ:

## ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்

சிறந்த ஸ்ரீவைஷ்ணவ மாதப்பத்திரிகை

ஆசிரியர்:—

**ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்**, அட்வகேட்,

3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

வருடச் சந்தா ரூ. 5-00

ஸர்வஜித் மார்கழி 28உ (12-1-1948) முதல் வெளிவருகிற